கள்ளருந்திநாளுங்கடைதோறுழல்மடையன்
விள்ளருந்தியன்னவெறியினான் — உள்ளிவந்த. (௧௦௪௩)

தெற்றேறுவினவுகின்றேனிவ்வறைக்குணீர்பதுங்கிச்
சற்றிருமென்றன்னவனைச்சந்தித்தே — யுற்றிருகை. (௧௦௪௪)

கூப்பியடியாள்மீதுங்கோபமாசண்டாளப்
பாப்பியவள்சொன்னபடிப்பினையா — வேப்பிலைபோ. (௧௦௪௫)

லானேனோசாமியருமைத்துரையேயெங்
கோனேயெனக்கேற்றகுஞ்சரமே — யானுமுனாம். (௧௦௪௬)

நாணுதுடல்மெலிந்துநாலைந்துநாளுறுமைக்
காணுதகண்ணறுமொருகண்ணுமோ — வூறுமக்க. (௧௦௪௭)

மற்றேனேயத்தானென்னாசைக்களஞ்சியமே
நற்றேனேமற்றவனைநத்தேனே — சற்றே. (௧௦௪௮)

தழுவணையிற்சாய்ந்துமதுதம்பலத்தையென்வாய்
மழுமழுப்புத்தீரவுமிழ்ந்தீர் — இழிவிசெய்து. (௧௦௪௯)

அக்ரமத்தைக்கேட்டீராயாரோவொருவனிடங்
கைக்கடனாய்ப்பாத்திரக்கடைபுகுந்து — தக்கவொரு. (௧௦௫௦)

கொப்பரையைவாங்கிவந்தாள்கூடாதெடுத்தெறியென்
றெப்படியோசொன்னேனிணங்காமல் — முப்பகலாய். (௧௦௫௧)

மாச்சரியமெத்தவளர்ந்திங்கவட்கெனக்கும்
பேச்சிலையென்சொல்வேன்பிரமாதம் — ஆச்சுதந்தப். (௧௦௫௨)

பாத்திரக்காரப்படுவானடிக்கடிவந்
தாத்திரமாய்ப்பேசியலையிறுன் — பார்த்திருக்கக். (௧௦௫௩)

கூடலையத்தைக்கொடுத்துத்தொலைத்துவிடுங்
கூடலையென்றெண்ணிமனங்கோணுதீர் — நீடியுமை. (௧௦௫௪)

யன்றிப்புகலெனக்கிங்கார்சொல்வீரய்யாநீ
ரன்றிரவிற்கன்னியழித்தமுதற் — றான்றுயிலி. (௧௦௫௫)

தன்னைமதித்தேனுதாய்வார்த்தைகேட்டேனு
பின்னொருவராசைபிடித்தேனு — மன்னவரே. (௧௦௫௬)

நீரோகெதியெனவுநேசித்தேனென்பதிங்கு
ஆரறியுந்தெய்வவுளமறியும் — நீரறிவீர். (௧௦௫௭).

ரென்றுபலவாறாயியம்பித்தழுவுவள்போ
லன்றவன்கௌபீனத்தடக்கிவைத்த பொன்றுகையைக். (௧௦௫௮)

கைப்பற்றிக்கொண்டுகனிந்தபொழுதாங்கவனை
வைப்புற்றேன்மெல்லவரவவனை யிப்பதிதன். (௧௦௫௯)

யாரென்றான்கேளீரயலானெளியபிச்சைக்
காரனிலுமெத்தக்கடைகெட்டான் சீரழிந்த. (௧௦௬௦)

சூதாடிக்கள்வனிவன்சுத்தவிருமாப்பயற்கிங்
கேதேனுஞ்சோலியொன்றுமில்லைக்காண் காதலரே. (௧௦௬௧)

மின்றிகழுமேனிவெயர்த்துப்பயிர்ப்படைந்தே
னின்றிரவுமாலையெழுமணிக்கு ளொன்றியா (௧௦௬௨)

யீங்குறுவீரென்றவனையெந்திவெளியேற்றிவிடுத்
தாங்கவன்பாலெய்தியனம்போலும் னாங்குடையீர். (௧௦௬௩)

நேற்றிராவோர்மணியும்நீர்வருவீரென்றுதனி
வீற்றுநெடுநேரம்விழித்திருந்தேன் காற்றிலலை. (௧௦௬௪)

பட்டகலம்போற்பழிகாரமன்மதனும்
தொட்டசரமெண்ணத்தொலையுமா வொட்டிமிக. (௧௦௬௫)

வாடுமெளியாள்மனத்தையறிந்துமென்னே
யேடல்புரிதலுமக்கழகா நாடியுமை. (௧௦௬௬)

யன்றிமற்றோர்க்காசைப்படுவேனோவெய்யபுலி
கன்றிடினும்புல்லைக்கறிக்குமா வென்றுமுனைக். (௧௦௬௭)

கைவிடேனென்றெனக்குக்கட்டுறுதிசொன்னதெல்லாம்
பொய்வசனந்தானோபுலையாட்டே வையகத்தி. (௧௦௬௮)

லென்சோட்டுப்பெண்டுகளோயெவ்வளவோகோடிபசும்
பொன்தேடிக்கொண்டுபுகழ்படைத்தா ரன்பொடுமை. (௧௦௬௯)

நம்பியிருந்தேனேகட்டாற்றில்விட்டீரே
வம்பியர்களேசவசையாச்சே கொம்பிழந்த. (௧௦௭௦)

மந்திபோலாகிமறுகித்தவிக்கவுங்கள்
சிந்தையிரும்பாகிறதோசிலையா சுந்தரவில் (௧௦௭௧)

மன்றாவெனவிழிநீர்மார்பில்வழிந்தோடுதல்கண்
டன்றான்மெய்யென்னவவளையணைத் தன்னமே. (௧௦௭௨)

கோணிமனம்வாடிக்குலையாதேயென்தெய்வத்
தாணையுனைக்கைவிட்டகன்றிடேன் காணிகள்விற். ௧௦௭௩)

றன்பாலளிப்பேனொருக்காலுஞ்சொற்றவறே
னென்பாற்கவடுறுமென்றெண்ணாதே நம்புவையென். (௧௦௭௪)

றேனவாய்ப்பேயனியம்புமொழிகேட்டுநகைத்
தானுறிஞ்சிமெல்லநயந்தோதுவாள் மானனையார். (௧௦௭௫)

வன்னச்சரிகைப்பாவாடைத்துணிமணிகள்
என்னென்னமோகடன்கொண்டெய்தினே ரன்னகடைக். (௧௦௭௬)

காரனைவன்றெருந்தரவைக்கண்டுரைக்கப்போமோவெம்
நேரம்வருவானோநிலையறியேன் நீரதனைத். (௧௦௭௭)

தீர்த்துத்தொலைத்துவிடுஞ்செல்லத்துணையேயென்
றேய்த்தவன்கைப்பொன்னையினிதுபற்றி ராத்திரியி. ௧௦௭௮)

லெட்டுமணிநேரமெழுந்துவருவீரெனவச்
சொட்டனையுமெத்தித்துரத்திவிட்டு முட்ட. (௧௦௭௯)

வயலைறக்குட்பட்டவனையுஞ்சோதித்துக்
கயிலிருந்ததெல்லாங்கவர்ந்து நயவுசெய்திக் (௧௦௮௦)

கங்குலினீரெட்டுக்கடிகைதவறுமலுநீ
ரிங்குறுவீரென்னவுமேமாத்தியே சங்கையிலா (௧௦௮௧)

திப்படியேயொவ்வொருவர்க்கிங்கிதங்கள்பேசியவர்
கைப்பொருளைமுற்றிலுந்தன்கைப்படுத்தி யப்படிவா. (௧௦௮௨)

ராங்குவருநேரமறிந்தாடைகளைந்தோர்துணியைப்
பாங்குறவேசுற்றிப்பயில்காட்டி யீங்கு. (௧௦௮௩)

விலக்கமுற்றேனென்னவி[illegible]
ருலக்கையைநேரேகிடத்தியோகோ விலக்கமுறும். (௧௦௮௪)

னைந்துநாளாகலையேபாங்குகருப்பமுறுகுறையென்
றுந்தியிகோடங்கிமுழக்கோசையிட்டுத் தந்திரங்கள். (௧௦௮௫)

காட்டிப்பொருள்பறித்துக்காரிருளிற்சென்றுதடு
காட்டிற்கழிப்புக்கழித்தானே மீட்டுமொரு. (௧௦௮௬)

மாந்திரிகனென்னெனமோமாயவித்தைசெய்தவனோ
ரேந்திரத்தையென்கழுத்திலிட்டானோ தேர்ந்தபரி. (க௦௮எ)

காரியொருவன்சூதகத்திராட்சியாமெனவேவார்
சூரணத்தைநல்கவுநான்றுய்த்தேனோ காரியமொன். (க௦௮௮)

றுகலையேயென்னைபருமைப்பொருள்துலைந்துந்
தேகசொஸ்தமில்லாமற்சீர்கெட்டேன் மோகமுற்று. (க௦௮௯)

வந்தீரேயுங்கண்மனம்போனடப்பதற்குச்
சந்தியிலிப்பேஷ்டைதடையாச்சே யந்தோகா. (க௦௯௦)

னிச்சைமிகக்கொண்டேனேயீரிரண்டுநாளுமதன்
சச்சரவிற்பட்டுத்தவிப்பேனே இச்சனியன். (க௦௯௧)

நாளையுமலாகாதாநாசமற்றுப்போகாதா
கோளுறுமென்பாவத்தைக்கொட்டிற்றே வேளையிது. (க௦௯௨)

போனாலுமென்னபொறுத்திருந்திங்கஞ்சாநாட்
டானேவருவீர்தடையிலையே கோனேயென். (க௦௯௩)

றெவ்வொருவருக்குரிற்றேயோதியவர்போனபின்னர்
கைவளமுற்றுற்குவருங்காளையனைத் துவ்வியனேனும். (க௦௯௪)

இவ்விதமாய்மாயமிப்பற்றித்தனங்கவரும்
மைவிழியார்செய்கைமுழுத்தரித்தே யொவ்வியெதிர். (க௦௯௫)

கண்டால்முகஸ்துதியுங்காணாவிடத்திழிவுந்
திண்டாடல்காட்டித்திரியுமிந்த லண்டியரை. (க௦௯௬)

நோக்கிப்பொருளிழந்துநோய்கொண்டெளியவரா
யாக்கமற்றுக்கெட்டாரநேகரே நீக்கரிய. (க௦௯எ)

தத்தமனையாளைத்தனியிருத்திப்பற்பலர்போ
கத்தைநுகர்தோஷிக்கணிகையர்மேற் பத்திவைத்த. (க௦௯௮)

காரணமீதென்னேவக்கண்ணியர்களல்குலிலே
வாரியமுதத்தையுள்ளில்வைத்தனவோ சாரமுள்ள. (க௦௯௯)

தேனைப்புகுத்தினவோசீனிப்பாகாலுமதைத்
தானமைத்ததோவலதுசர்க்கரையோ ஆனாலவ்வு. (க௧௦௦)

கற்கண்டைமுக்கனியைக்காய்ச்சிச்செலுத்தினவோ
வெற்கொன்றுந்தோன்றுதெழுமரம்போல் நிற்கின்றேன். (க௧௦௧)

அந்தோவென்சொல்வேனழிந்தகையுடையார்க்
கெந்தவிதஞ்சொல்லினு * மன்னோரூதே முந்துகா. (௧௧0௨)

தேட்டிற்பெருமைபெற்றுத்தேசார்ந்தவேசையரும்
நாட்டிலுற்றபஞ்சகவிவினும் றோட்டிறந்து. (௧௧0௩)

மேனிமினுக்கொழிந்துமேவிற்றசைவறந்து
கூனல்மந்திபோலுமெழில்குன்றினரே யீனமுறம். (௧௧0௪)

தொற்றுவிபசாரத்தொழில்புரியுமாதர்களைப்
பற்றியிதில்முன்னும்பகர்ந்தனனல் சுற்றுஞ்ந. (௧௧0௫)

## சவுளிக்கடைக்காரர்சரித்திரம்.

சவுளிக்கடையுடையார் தன்செயலுஞ்சற்றே
விவரித்துச்சொல்வேன்மெலுக்காய் எவருக்கு. (௧௧0௬)

மானங்காப்பார்களென்றவாய்மையேயன்றியரி
மானங்காவாதவளமுடையார் தானம். (௧௧0௭)

குடல்குழையநெய்தோருடைகளைக்கொண்டன்ன
கடைகாரர்பாலதனைக்காட்ட வுடைமீதி. (௧௧0௮)

விட்டசாமான்களையுமேமெற்றேட்டுநாளுமவர்
பட்டபிணையாசமொன்றும்பாரம விட்டமுட்டன். (௧௧0௯)

பாதிவிலைகேட்கப்பகிரொன்றெழுந்தந்த
வீதியெலாஞ்சுற்றிமிகவலைந்தும் மாதியினிற். (௧௧௧0)

கேட்டவற்குங்கம்மிவிலைகேட்கமறுபோக்கிலராய்
மீட்டுமுனஞ்சென்றகடைமேவியே நாட்டொடங்கி. (௧௧௧௧)

யற்றைப்பிழைப்புடையாராகையாலன்றவர்கள்
சொற்றவிலைபெற்றுமனஞ்சோர்ந்தகலத் துற்றுஞ் (௧௧௧௨)

சவுளிகளைச்சேர்த்தடுக்கிச்சார்ந்தவிலைதன்னை
யுவகையுறவொட்டித்துயர்த்திப் பலமுறுகைச். (௧௧௧௩)

சாத்தெழுதியுள்ளூர்ச்சரக்குகளுக்கோராணாக்கா
லேத்துதுலைச்சரக்குக்கீராணைக்கால் வாய்த்திதுவே. (௧௧௧௪)

---

* அல் - காது.

லாபமென்றுமேதிலர்காண்கேலாவிலாசமொன்று
தீபகம்போலெவ்வொன்றிற்றீட்டுவார் சோபிதமாய். (௧௧௧௫)

வந்தோர்க்கெழுந்துவணங்கியுபசரிப்பார்
முந்தவுந்தாம்பூலத்தைமுன்வைப்பார் அந்தோநீர். (௧௧௧௬)

மின்மருவுமேனிவெயர்த்திடவெழுந்து
மென்விசிறிகொண்டுமெல்லவீசுவா ரன்னியர்வந். (௧௧௧௭)

தின்னார்கடையாங்களமெனவுங்கேட்பவருக்
கன்னானென்றேயவம்புகல்வார் பன்னாளும். (௧௧௧௮)

வீசுகடைவாயினின்றுவேறுகடைக்கேகுவனை
யாசைமிகவூட்டியழைத்திடுவார் பேசுகிறைக். (௧௧௧௯)

கோல்கொண்டளந்துகுறிக்கும்பொழுதழுக்கை
யெல்லையுறவைப்பாரிரண்டிடத்தில் சேலைவிலை. (௧௧௨௦)

தன்னிலொருரூபாய்ச்சரக்கையணாயாய்க்கொடுத்துப்
பின்னிரட்டிப்பாகப்பெரிதுகொள்வார் மன்னுகலைக். (௧௧௨௧)

காங்குவருவார்கடம்மிலாள்நோக்கம்பார்த்துமகிழ்ந்
தீங்குவருவீரென்றிறைஞ்சியே தாங்களிங்கு. (௧௧௨௨)

வந்ததுவுமென்றவமேவர்த்தகசம்பாதனையிற்
சிந்தைவைத்தேனென்று * தெவிட்டாதீர் சந்ததமுந். (௧௧௨௩)

தூக்கமதில்மூழ்கிச்சுழலாமலெப்பொழுது
போக்குதற்காய்வைத்ததிந்தப்போட்டியே யாக்கமுற்று. (௧௧௨௪)

* மோதமுறவுள்ளேன்முதற்குமுதற்கிடைத்தாற்
போதுமென்பதுள்ளப்பொருத்தமே யீதிற். (௧௧௨௫)

கடைவைத்தநாள்முதலாய்க்காசினியோர்மற்றைக்
கடைகளைநாடாமற்கசந்தா ரிடையிற். (௧௧௨௬)

கடைகாரர்கூடிவழிகட்டிமறித்தாலுந்
தடைமீறியென்கடையேசார்வார் கடைகாரர். (௧௧௨௭)

தன்முகமேதாமரையாமென்முகமோர்சந்திரனாய்ப்
புன்மையழுக்காறடைந்தார்புந்தியிலார் தன்மனிவன். (௧௧௨௮)

---

* தெவிட்டல்-நினைத்தல்,
* மோதம் சந்தோஷம்.

ஞமென்றென் பால்மருவுமன்னவனை வேறுகடை
மேபாமென்றுநான்சொல்லப்போகுமா ஓமென்ற. (ககஉகூ)

சத்தியமேயெல்லுந்தலைகாக்குந்தர்மமென
வத்தனுனை நீதியறியீரா யெத்தனை தான். (ககஙo)

மேவுகினுங்கொண்டவிரதந்தனைமறந்து
பாவமுழல்மூழ்கப்படலாமா தேவனடி. (ககஙக)

யுள்ளியமெய்யன்பருகவா தருவருத்துத்
தள்ளியவீண்செல்வச்சவமன்றே வெள்ளமெனப். (ககஙஉ)

பொங்குற்றவர்தனமும்பூபாலர்வாழ்க்கைகளும்
எங்குற்றதன்றேவியம்புவீர் சங்கற்ப. (ககஙங)

முன்னியநற்செல்வமுந்தாழ்வூர்ந்தசரித்திரமுந்
தன்னியற்பேரேயதற்குச்சான்றாகும் துன்னுடனப் (ககஙச)

பற்றிற்றபட்டினத்தார்பாவபுண்யமேயிரண்டும்
பற்றித்தொடருமென்றும்பாடினர் துற்றியெழு. (ககஙரு)

புற்புதமேயாகுமிந்தப்பொய்யாமுலகவியல்
சொற்பனமென்றுள்ளத்துணியன்றே மற்பநிதிக். (ககஙசா)

காசைகொண்டுவீணேயலைந்துதிரிந்தோமினிநா
மீசனடிக்காளாவதெக்காலம் பாசவினை (ககஙஎ)

வீட்டுபெரியோரருளால்வேதாந்தசாஸ்திரத்தில்
நாட்டமன்றிவேறொன்றைநாடிலேன் யீட்டுமுங்கள். (ககஙஅ)

சொந்தக்கடையிதன்றேசூதாகவேற்றுமைகள்
புந்தியிற்சற்றேனும்பொருந்தாதீர் கந்தாநீ. (ககஙகூ)

மேனடுத்தாவாரமதில்மேவும்புடைவைகளைத்
தானெடுத்திங்கோடிவாசல்தியினில் கானடுக்க. (ககசo)

முற்றனையோபோடாவுதவாக்கழிசுறடே
சற்றுமறிவில்லாத்தடிப்பயலே மற்றுநல்ல. (ககசக)

சாமான்பலவிருக்கத்தாழ்ந்ததைநீகொண்டுவர
லாமாயிவனையறியாயா சீமான்க. (ககசஉ)

ளானபெரியோரெனவுமற்பமனுஷாளெனவுந்
தானறிந்துகொள்ளத்தரமிலையே மானரெனக். (ககசங)

இன்புள்ளநேசரிவர்க்கிப்புடவைகளை
யன்பிலர்போலீதலழகலவே    பின்பிலைகள். (௧௧௪௪)

தானமூத்தமில்லைத்தனியோரிழைச்சரக்கு
மாநிறத்தசாயமிதுமங்கிவிடும்    ஆனதினு. (௧௧௪௫)

லிச்சவுளியெல்லாமெடுத்தவிட்டுத்தடுக்கி
மச்சுவாசற்குவடபுறத்தில்    வைச்ச. (௧௧௪௬)

புடவைகளிற்றானிறுகற்பூவிறுகற்காயோ
டுமேறுதற்காய்ப்பூவரும்பு    படுமுடங்கற். (௧௧௪௭)

பிஞ்சுமலர்தற்பழம்பூப்பின்குவிதற்காயரும்பு
எஞ்சும்விரிதற்காயெழுதற்பூ    மிஞ்சிணங்க. (௧௧௪௮)

லிந்தவிலாசம்போட்டிலங்கும்புடவைகளை
மந்தமிலாதீண்டெடுத்துவாவென்ன    அந்தமுழுப். (௧௧௪௯)

பட்டிமகனுங்குற்றபாவனைபோற்றுமதித்தங்
கெட்டியதையேகொடுவென்றெய்தலுமே    இஷ்டமுள்ள. (௧௧௫0)

நாட்டிகரோநல்லதரமதிகநேத்தியிது
சேஷ்டராபீசுச்சிரஸ்ததார்    வீட்டுக்குச். (௧௧௫௧)

சொல்லிவரவழைத்ததூயகலைவர்க்கமன்றோ
கல்வியீர்முற்றுமிதைக்கண்பாரும்    பல்குமிது. (௧௧௫௨)

இன்னதினுசின்னவிலையீழத்துப்பட்டுடைகள்
சென்னையிற்பேர்பெற்றதினுசிதுகாண்    சொன்ன. (௧௧௫௩)

நிதிக்குத்தகுந்தநிறைசரிகைபூட்டி
யுதிப்புற்றுயர்ந்தவுருமால்    சதுர்க்கிசைந்த. (௧௧௫௪)

சாதராவீதுநல்லசால்வைபீதாம்பரம்பொய்ச்
சூதிராக்கண்டையிட்டதுப்பட்டா    வீதுசெழும். (௧௧௫௫)

பட்டுக்கரைச்சோமன்பார்வைக்கெப்போதுநிறம்
விட்டுக்காட்டாதுமிகவழுத்தம்    நெட்டையிது. (௧௧௫௬)

காஞ்சிபுரச்சோமனிதுகன்னடதேசத்துமடி
நாஞ்சிநடுநாட்டிலுள்ளநல்லுடைகள்    தீஞ்சொல்மட. (௧௧௫௭)

மாதர்க்கிணங்குமணிவண்ணப்புடவைகளி
லோதற்கெளியனவோவொவ்வொன்றும்    சோதிதிகழ். (௧௧௫௮)

முத்துவர்ணம்சித்ரவர்ணம்மேகவர்ணம்மேகவர்ணம்
நித்திலத்தார்பூண்டநெளிவர்ணம் மெய்த்தரவி. (ககருகூ)

காந்தம்நிலவார்ந்தசந்த்ரகாந்தமுயர்மாமதன
காந்தமெழில்மேவுமிந்த்ரகாந்தமிசை வாய்ந்திலகு. (ககசூ0)

தீம்பட்டகஸ்தூரிசேலைகுறநாட்டுமேணிப்
பூம்பட்டுநேர்கடலைப்புட்டாணி யாம்பற்போ. (ககசூக)

தன்னபந்தர்ச்சேலையருகுமணிச்சேலையிது
வன்னமயிற்கண்சேலைவாணத்தார் பின்னுமிது. (ககசூஉ)

கஞ்சத்துச்சல்லாகமழ்சந்த்ரகாவியிது
பஞ்சவர்ணப்பூவிழைத்தபாவாடை மஞ்சுமுத்து. (ககசூக)

மின்போலுஞ்சாயல்விளங்கிப்பளபளெனப்
பொன்போலிலங்கும்புதுத்தினுசே யன்புறநீர். (ககசூச)

மாணித்தசாயமிதுமங்காதுமங்கிடிலோ
நாணுத்ரவாதியிதுநம்பிக்கை தாணிதைநீர். (ககசூரு)

பார்த்தறிவீரென்சொற்பழுதுபடாதோர்காலும்
நேர்த்தியிதுவென்னநினைந்துகொள்வீர் சேர்த்தியகைச் (ககசூசூ)

சாத்திதைநீர்பார்த்துத்தபவாயளிப்பதையுங்
காத்தெதிர்சொலாமலிருகைக்கொள்வோ வாய்த்த (ககசூஎ)

மனம்போனபடியெனவாய்ப்புறவெட்டித்து
தனங்கவர்தலன்றோர்தரமே யினைந்து. (ககசூஅ)

வகைதெரியாராங்குவருவார்களாகிற்
பகிடியுறப்பேசிப்பகட்டி மிகநீண். (ககசூகூ)

காலங்கிடந்துநைந்தகட்டுக்கிடைகளையச்
சேலங்குடந்தைத்தினுசெனவுந் சாலமுடன். (ககஎ0)

காட்டிமுழநீட்டிநகைகாட்டிவெட்டிப்பாகவிலை
போட்டவர்கள்கண்ணில்மண்ணைப்போடுவரால் கோட்டமொழி. ()

முன்கணக்கிற்பாதிநலம்மோசமுறவிற்பனையிற்
பின்குறிப்பிற்பாதிநலம்பெற்றிடலாம் றன்கையிருந். (ககஎஉ)

நீட்டுமுதலொன்றும்மிலாபவரவிலொன்றுந்
தேட்டினைக்கண்டுள்ளஞ்செருக்குளராய் வாட்டமின்றி. (ககஎக)

எப்பொழுதுமிந்தவியல்பாய்ப்பொருள்கவர்ந்து
செப்படிவித்தைத்தொழிலைசெய்கின்ற — றிப்படியே. (ககஎச)

யாக்ரமஞ்சேர்பொய்யரனேகரிருந்தாலுமதில்
யோக்கியர்களுஞ்சிலர்களுண்டன்றே — வூக்குசிவ. (ககஎரு)

கங்கைநகரிற்கணிதனருணாசலமா
லிங்கிதகுமாரனெழில்மாரன் — ஆங்கனுல. (ககஎசு)

தெங்குமிசைபெற்றோணிராமாயணப்ரசங்க
துங்கன்முத்துக்கிர்ஷ்ணதுரைபூமான் — பொங்கமிகும். (ககஎஎ)

இம்பாபுகழ்சுந்தரமாலீன்றவருணாசலனய்
யம்பெருமானென்னுமவர்க்குமுன்னோன் — உம்பர்பணி. (ககஎஅ)

வெண்ணிமலைசெந்திமலைமேவும்பொருட்குடையான்
வெண்ணிமலையென்னும்விதரணவான் — மண்ணின்ற (ககஎகூ)

வந்தரிதியானமுள்ளோனாதிமூலேந்த்ரனருள்
சந்ததிநால்வர்க்குட்டலைமையான் — புந்தியர்மேல். (ககஅ0)

மாத்தயானைத்துவளங்குநிதியுடையான்
காத்தயாவென்னுங்கருணைமால் — சீர்த்திதிகழ். (ககஅக)

மூவர்களவர்த்தகத்திலுமவாமுயற்சியினர்
பூவுலகோர்மெச்சும்புகழுடையார் — யேவர்க்கும். (ககஅஉ)

ஈட்டுமுதலுக்கிலாபமோர்வீசமன்றி
நீட்டிவிலையேற்றுநெறியுடையார் — நாட்டிலொரு. (ககஅங)

சாரமற்றநீசர்முதற்சக்ரவர்த்தியானாலும்
பாரபக்ஷமில்லாதபண்பினரே — பாரிற். (ககஅச)

பலசரக்குவிற்போர்பலகாரஞ்செய்வோர்
கலகலத்தபாத்ரக்கடையார் — விலையுயர்த்த. (ககஅரு)

சீமைமுதலானபலதேசசாமான்கொணர்ந்து
காமுறுநற்ஷாப்புக்கடைகாரர் — மாமருவு. (ககஅசு

நெல்மண்டிக்காரர்நிறைதவசக்காரர்குறுங்
கல்மண்டரிசிக்கடைகாரர் — நல்வளமாய்க். (ககஅஎ

கூட்டுசெட்டவர்க்கமெனக்கூறிவெறுங்கைதனையே
காட்டுகின்றசோற்றுக்கடைகாரர் — கோட்டமொடு. (ககஅஅ,

சாய்த்தளக்கும்வாணியர்கள்சாளிகைசெய்க்காரர்மிக
வாய்த்தநவதான்யவகுப்புடையார் சேர்த்திலைக்கும். (ககஅகூ)

தையல்வேலைக்காரர்தையல்பலருக்குமதி
மையலுறப்பூட்டும்வளைகாரர் செய்பல. (ககசூ0)

காய்கறிசாமானிலைதேங்காய்பழம்பால்மோர்பெருகு
காய்தகரலந்தர்க்கடைமுதலாய் ஆயபல. (ககசூக)

வெல்லாத்தொழில்களுமேமாற்றுதொழிலல்லதுரு
இல்லாத்தொழிலொன்றுமில்லையே தொல்லுலகோர். (ககசூஉ)

## தீபாவளிப்பண்டிகைவருதலைப்பற்றி

### நாயகி நாயகனிடங் கூறுதல்.

சித்தந்தெளியாமற்றேய்பியலமுறுங்காற்
சுத்தமிருந்ததுலாமதியில் மெய்ந்திதீ. (ககசூங)

பாவளியென்றோர்பண்டிகையீங்குறுதலெனப்
பூவுளர்சொற்கேட்டவொருபொற்கொடியா ளாவிழனுக். (ககசூச)

கென்புரிவேமென்னவிதயந்தளர்ந்தவளாய்த்
தன்புருடனோடுமெல்லச்சாற்றுவா ளம்புவியில். (ககசூரு)

நீடியதன்வீட்டுதிருவாகமின்னணமென்
றூடவர்சற்றேனுமறிகில்லார் நாடியதை. (ககசூசு)

வாய்ச்சேதியாயுரைக்கவாயெடுக்குமுன்றிமுழு
மூச்சாய்வெய்கோபமுகமிட்டி யாச்சாவென. (ககசூஎ)

றூத்தாளுக்கேச்சுமவளப்டனுக்குமப்படியே
பார்த்தார்நகைக்கும்படிதூற்றிப் பாத்திரா. (ககசூஅ)

பாத்திரமீதென்னப்பகுக்காதிகழ்ந்திடுதல்
வாய்த்தபுருஷாள்தன்வழக்கமே யாத்திரமாய். (ககசூகூ)

நாளையோநாளைமின்றோநாசமற்றதீவாளி
மாளிகையைத்தேடிவருகிறதாம் கேளுமிதற். (க200)

கேதுசொல்வாறுங்காணேனிதனையலாரிலம்போ
யோதிலுரல்மத்தொடைக்கையொக்குமே யீதுமின்றிங். (கஉ0க)

காலந்தவாமற்கருதிவருடத்தொருநாட்
சாலவிவண்போந்துவெகுசம்பமாய்க் கோலமிட்ட. (௧௨௦௨)

பட்டுப்புடவையென்றும்பாவுகண்டைச்சோமனென்றும்
மட்டுயர்பாவாடைவளையலென்றும் சட்டரசஞ். (௧௨௦௩)

சேர்ந்தகறிவர்க்கமென்றுந்தீம்பாலடிசிலென்றும்
வார்ந்தபலகாரவரிசையென்றுங் கூந்தலொடு. (௧௨௦௪)

துண்டிகிலுஞ்சோரமென்கைநொந்திடவிராமுழுதும்
பெண்டுகளையாட்டிவைக்கும்பேயன்றோ அண்டியண்டிக். (௧௨௦௫)

தொன்றுதொட்டுநாளுந்தொடர்ந்துமனைபூந்துநன்றாய்த்
தின்றுநசிகண்டுசெழித்ததன்றோ யின்றதனைச். (௧௨௦௬)

சும்மாபோவென்றுதுரத்தியடித்தாலுமஃ
தும்மாலைமேலிலொழியாதே செம்மையாய். (௧௨௦௭)

யெல்லைவைப்புறமுற்றவையிலாவிடினுஞ்செங்கெலிருந்
தாலதுகொண்டேர்வாறகற்றலாங் காலைமுதல். (௧௨௦௮)

லுப்புக்கிடையாதுபுரியபுளிமிளகா
யப்படியேயெல்லாமவதியே கைப்பணவாம். (௧௨௦௯)

நொய்யசிறுகேழ்வரகினுண்ணரியயாவாலும்ரொட்டி
செய்யவுமென்றாலுஞ்செயலிலையே கையினிதி. (௧௨௧௦)

யுள்ளவர்கள்வீட்டினிற்சிற்றுண்டிபலசெய்வர்கணம்
பிள்ளைகள்கண்டேங்கிப்பிதற்றுமே சள்ளையிதற். (௧௨௧௧)

கென்னவகையென்றேயினைந்துநிலங்கீறி
நன்னெறிகளோதினனமாய் முன்னின்று. (௧௨௧௨)

மாகண்டிச்சொல்லமணவாளன்கேட்டுவெகு
மூதண்டமாய்க்கோபமூட்டியே யாதுசொன்னாய் (௧௨௧௩)

மந்தரநேர்திண்புயத்தான்மால்துரைச்சிங்கேந்த்ரனன்று
தந்தவொண்டிவண்டிநெல்லுஞ்சாமானுஞ் சிந்தினையோ. (௧௨௧௪)

அஞ்சாறுவேளையின்னமாகவிலையேமுழுக்க
மிஞ்சாமலேசெலவாய்விட்டதோ அஞ்சாவுன். (௧௨௧௫)

நெஞ்சுவிருய்தணிக்கநேரினிலாளில்லையென்றே
கொஞ்சிநீமஞ்சட்குளிக்கிறாய் வஞ்சமற. (கஉகசு)

விச்சையுடனுழுவோனேழையானுலெருது
மச்சினங்கொண்டாடுமென்றவாறுபோல் மெச்சியகம் (கஉகஎ)

கொண்டலவோசற்றுங்குறியாமற்பொல்லாத
வண்டனென்றுஞ்சிந்தைமதிக்காம லண்டிநின்று (கஉகஅ)

தில்லாயக்கட்டுமொழிசெப்புகிறாய்வீட்டுநடப்
பெல்லாமறிவேனிருக்கட்டும் யில்லமதிம். (கஉககூ)

றெண்டனையில்லாதாற்சிறுதேட்டுக்காகநெல்லைக்
கண்டுங்காணுமலெனைக்கண்மறைத்துக் கொண்டுபோய். (கஉஉ0)

பாதிகுப்பாதிவிற்றுப்பாழ்த்தகைசெய்வதுமச்
சேதியெனக்குந்தெரியுமடி பேதையிவ. (கஉஉக)

ளூமாண்டியென்னகினைத்துப்பொடிகம்பூரமுதும்
சாமான்களெல்லாஞ்சருவகொள்ளை நீமைக்கு. (கஉஉஉ)

மூந்துமயல்வீட்டிலண்டிமுண்டைகளேயுட்களவுக்
கந்தரங்கமென்பதுவும்யானறிவேன் சந்தகமுந் (கஉஉங)

சிந்தைமகிழ்தொம்பரையின்செங்நெல்முழுதுக்குமோ
ரந்தெனவுநீவந்தவதரித்தாய் சிந்தாம. (கஉஉச)

விற்பொருளைத்தன்னுயிர்போலெண்ணியதைக்காப்பவளே
சற்புனிதையென்றுலகஞ்சாற்றுமால் தற்பொருளைக். (கஉஉரு)

காவந்துசெய்திருந்தாற்கஷ்டமுற்றவிக்காலந்
தாவந்தமென்னுஞ்சொற்றுனுண்டோ பாவியேன் (கஉஉசு)

மெய்வருந்தியெவ்வளவோமிக்கதொழில்கற்றிருந்துங்
கைவருமானங்களைக்காசில்லை யிவ்வருடம். (கஉஉஎ)

வெள்ளாண்மையல்லைவிளைவில்லையென்றறிந்தும்
பிள்ளைமதியுடையபேதாயுன் னுள்ளமதிற். (கஉஉஅ)

றைக்கவில்லையேபழகத்தக்கிளிப்பிள்ளைதனக்
கொக்கும்விதம்போனுனைத்துவந்தும் அக்கறைசற். (கஉஉகூ)

றேனுமிலையேமினிமேலெப்பவரும்புத்தியென்று
லானமட்டுஞ்சொல்லியலுத்துவிட்டேன் மானே. (கஉ௩0)

மனைத்தக்கமாண்புடையளாகித்தற்கொண்டான்
வனத்தக்காள்வாழ்க்கைத்துணையா மெனப்பலவாய்ச். (கஉகூக)

## நாயகனுக்கு நாயகி தட்டான் சங்கதிகூறுதல்.

சிறிசிறுப்புசினந்துளைக்குங்காலேயிவள்
வேறானாயபச்சத்தால்மெய்பொடுங்கி மீறுசின. (கஉகூஉ)

மாறியவன்சாந்தமடைந்தனகண்டுள்ளமலர்ந்
தூறியபின்னென்னவும்பின்னோதுவாள் வீறியன்ற. (கஉகூங)

தேவரீரென்னைச்சிறுகேட்டிக்காரியெனக்
கூவியிரைந்துமிகக்கோபித்தீர் தேவறியுஞ். (கஉகூச)

சத்தியமாயென்காற்றடத்தில்மிதித்தோர்க்குமந்தப்
புத்தியொருக்காலும்பொருந்தாதே தத்தைநல்லார். (கஉகூரு)

கைப்பிடித்தநாயகனைக்கண்கட்டியேசிறுதேட்
டெப்படியோசெய்வித்திழக்கின்று ரப்படியோர். (கஉகூசு)

நல்லகதைகேளீர்நகைக்காசைகொண்டுசெம்பொற்
கொல்லனிடமெல்லாங்கொடுத்திழந்து மெல்லனிச்சப். (கஉகூஎ)

பூமாந்தினைபோற்பொருமிப்பலமடவா
ரேமாந்துநின்றுரியப் புவேன் ஆமொருவன். (கஉகூஅ)

கண்டிப்புக்காரன்கவுரிதிருமாளிகையோ
டண்டிப்பொருந்துமயல்மனையான் கொண்டவனே. (கஉகூகூ)

நம்பியொருகாசுகொடானுடுமிரவலர்மேற்
பம்பிமிகச்சீறும்பணியனையான் வம்பனவன். (கஉசா0)

சித்ரமனையாட்டிசிறுகேட்டிச்செய்பவளென்
றெத்தினமுஞ்சண்டையிரணைகள மித்தையறிந். (கஉசாக)

தாளேக்கணக்கிட்டரிசிசாமான்பலவு
நாளேக்கைத்தரமாய்நல்குவா னீளநிதம். (கஉசாஉ)

கண்டித்தபோதினுமக்கள்ளிசற்றுமஞ்சாமற்
றுண்டித்ததிலுமிகச்சோமாறிக் கொண்டதனைத். (கஉசாங)

தந்திரமாய்விற்றுத்தகுந்தபொருளீடுகொண்டு
சந்தைவட்டிக்கீந்துசதமைந்தா யிந்தவிதம். (கஉசாச)

தன்கையிருப்புள்ள தருக்காலகஞ்செருக்குற்
றென்செயலாமென் றிதயத்தெண்ணினுள் தன்பணிகள். (கஉ௪௫)

யாவுமிதுகர் நாடகப்பணிகளானதிலும்
மேவரியமாற்றுமிகக்குறைச்சல் தேவையுடன். (கஉ௪௬)

பூண்டாலும்வெட்கம்புவியோர்நகைக்கின்றார்
வேண்டாதுருக்கிவியன்புடத்திற் றாண்டியொளி. (கஉ௪௭)

ரங்கமுறலாக்கியதனேடுகைமுதற்குந்
தங்கமிகச்சேர்த்துத்தரந்தரமாய்த் தொங்கலிட்ட. (கஉ௪௮)

காதுக்குக்கைக்குக்கழுத்துக்கிசைந்தபடி
சோதிக்கிரணச்சுடரணியாய் வாதுக்குக். (கஉ௪௯)

கூச்சமறப்பூண்டுகுறிப்பாயெவர்களும்பொன்
காய்ச்சமரமென்றுகளிகூர நாச்சியார். (கஉ௫0)

போலிருந்துவாழ்வமெனப்பூரித்தாளக்கணமே
சாலவொருதட்டான்றனையழைத்தாள் மேலிலெனக். (கஉ௫௧)

கிட்டநகையுடனுமேலத்தொகைதருவேன்
கட்டினையான்சொல்லுங்கணக்குப்போற் றட்டாமற். (கஉ௫௨)

கோலுநகைபண்ணிக்கொடுப்பாயோவல்லநெடுங்
காலமிழுத்தாக்கடத்துவையோ பாலர்கட்கு. (கஉ௫௩)

மன்னியகல்யாணமிந்தமாதங்கடைசியினில்
நன்முகுர்த்தமிட்டுநடக்குதுபா ரிங்நகையை. (கஉ௫௪)

நல்வர்னமாகநாகசிட்டழுத்தமுடன்
சல்திபண்ணிமுந்தித்தரவேணு மில்லுடையான். (கஉ௫௫)

காழ்த்தகுணவானிடமென்கைமுதல்காட்டாமலுமிப்
பாழ்த்தநகையோடைம்பவுன்சேர்த்துத் தாழ்ச்சியறப். (கஉ௫௬)

பூட்டுவீரென்றுமயல்பூண்டுவரும்போதூடல்
காட்டிநெடுநாட்கழைத்துவந்தேன் கேட்டுநகைத். (கஉ௫௭)

தங்கவரும்பேதாயீதார்சொன்னபேய்மதியச்
செங்கொல்லர்செய்தியெதரியாயோ பைங்கமல. (கஉ௫௮)

மாவனையதேவிமணிச்சிலம்புவிற்கவந்த
கோவலனைமாட்டிக்கொலைபுரிந்தோர் தாவுபர. (கஉ௫௯)

காயப்ரவேசநிலைகாட்டும்விக்ரமார்க்கனையு
மாயச்சதிபுரிந்தவஞ்சனையோர் வாய்மையினிற். (கஉசூ0)

பங்கமுறுஞ்சொல்லார்படுமோசக்காரரென
வெங்கும்ப்ரஸ்தாபவசையேற்றமே யிங்குளனோர். (கஉசூக)

மூப்புற்றதட்டான்முடிவுற்றநாள்மகனைக்
கூப்பிட்டுச்சொன்னபுத்திகூறக்கேள் வாய்ப்புற்ற. (கஉசூஉ)

சேயேபவமணியேதேனர்க்கதிபதியே
மாயைபலவுந்தேர்ந்தமந்திரியே தாயகட்டில். (கஉசூஙூ)

முன்முளைத்துநீண்டுமுனைகுழைந்தகாதினிலும்
பின்முளைத்தகொம்பேபெலனலவா வென்னிலுநீ. (கஉசூச)

கற்றுணர்ந்துதேறிக்கடைப்பிடித்தாயாயினுமென்
சொற்றிறனுந்தேர்ந்துசுவையறிவாய் நற்றவத்தால். (கஉசூரு)

வண்மையுடன்பெற்றெடுத்தமாதாபிதாவேனினு
முண்மைநம்மள்ஜாதிக்குதவாதே யுண்மையினிற். (கஉசூசூ)

றக்கவரிச்சந்திரனுஞ்சத்தியத்தைப்பேணியந்தோ
மிக்கசெல்வந்தோற்றுவிலைப்பட்டா னிக்கலியில். (கஉசூஎ)

மெய்யொழுக்கத்தார்களுக்குமேன்மையொருநாளுமில்லைப்
பொய்யொழுக்கத்தார்க்கேபொருள்சேரும் பொய்யொருக்கா. ()

லாதிசிவனும்புகன்றனம்புயனுமன்றுரைத்தான்
சீதரன்பொய்சொல்லித்திருடினை னுதலினாற். (கஉசூகூ)

செய்யசிறுமானிடராய்ச்சென்மித்தநாந்திருடிப்
பொய்யுரைத்தாற்போச்சோபுகழ்மோசம் பொய்மகளா. (கஉஎ0)

ராயத்திலேபிறந்தாளந்தணரிற்பால்குடித்தாள்
மாயக்கண்மாதர்மனைவளர்ந்தாள் தேயமுள்ள. (கஉஎக)

தெண்டிசையுஞ்சுற்றியலைந்தேருங்கடையில்நம்மை
யண்டியக்கசாலையமர்ந்தனளாற் பண்டிவளே. (கஉஎஉ)

தெய்வநமக்காகுமவள்சேயாங்களவினையுங்
கைவிடவொண்ணாதுமுன்னோர்கற்பனையே வெய்யகொடுந். ()

தீயகள்வரோடுநம்மைச்சீர்தூக்கிப்பார்க்கிலந்தத்
தீயகள்வர்நம்மிற்சிறியரோ தீயகள்வர். (கஉஎச)

துஞ்சுதல்சோதித்திரவிற்சோரங்கள்செய்திடுவார்
நெஞ்சுதிடுக்கிட்டுநெடிதொளிப்பா ரஞ்சாநா. (கஉஎரு)

மப்படியோபோடாவறிவுகெட்டபிள்ளாய்பட்
டப்பகலேயாருமருகிருக்கச் செப்படிவித். (கஉஎசு)

தைத்தொழில்போலுந்திருடுந்தந்திரத்தைக்கண்டறிய
முத்தொழிலாளர்க்குமுடியாதே யத்தாநீ. (கஉஎஎ)

யோதரியதங்கமுருக்கும்பொழுதுடையான்
ஏதுவுடனேயிருந்துமென்றெரியான் ஊதகமுலிற். (கஉஎஅ)

சிட்டைக்கரியையிட்டுத்தீப்பொறியைத்தாவவிடும்
கிட்டவிருந்தோர்கள்கிளம்புவார் சட்டெனவே. (கஉஎகூ)

தங்கத்தைவவ்விச்சரியானவெள்ளிநிற
மங்கக்கரித்தடவினைத்துக்கொண் டங்குருகக். (கஉஅ0)

காயுமூலக்குக்கரியிடுதல்போலுமதைத்
தீயிடுக்கியாலுஞ்செலுத்திவிடாய் ஆயதன்றி. (கஉஅக)

யின்னமொருதந்திரங்கேளேழங்குலமளவா
மன்னகரித்துண்டினடிப்புறத்திற் பின்னுருவச். (கஉஅஉ)

சுற்றிவரச்சன்னத்துளையிட்டெவர்விழிக்கும்
பற்றுதலுருமற்பதுக்கமாய் மற்றதனே. (கஉஅஙு)

வெங்குகையிற்றங்கமெலிந்துருகக்கிண்டுவபோ
லங்கையினுற்சுற்றியலசுவா யங்கதுவும். (கஉஅச)

பற்றித்துளைவழியிற்பாய்ந்துள்ளடங்கியிடை
யுற்றிரண்டுமூன்றுவனையொட்டுமே சற்றுமிந்தத். (கஉஅரு)

தந்தைவெளிகாட்டாயென்றந்தையெனக்காதியினில்
முந்தியுபதேசித்தமூலமந்த்ரம் அந்தோயென். (கஉஅசு)

தந்தையார்தன்சமர்த்துஞ்சாதுரியவார்த்தைகளும்
இந்திரசாலத்தினியல்முறையும் சிந்தையினி. (கஉஅஎ)

லுன்னுசிற்பசாஸ்திரமுணர்ந்துமதிநுட்பமொடு
மன்னுகருக்கட்டியுருவார்ப்பதுவு மென்னுளத்தி. (கஉஅஅ)

லோர்போதெனேயின்றவுத்தமனேயானினைந்தால்
மாரோடுங்கண்ணீர்வழிந்தோடும் பார்மீதி. (கஉஅகூ)

லென்னரியகண்மணியேயென்றகப்பனூர்காலந்
தன்னிலவன்செய்தவொருசங்கதிகேள் தென்குளந்தை.(கஉகூ0)

யேந்தல்மூதாதையர்முன்னிஸ்திமிராரிச்சமிந்தார்
வாய்ந்தரசுசெய்துவருநாளில் லேய்ந்தவளந். (கஉகூக)

தங்குதேவஸ்தானந்தன்னிலரனூர்க்குநலம்
பொங்குமபிஷேகம்புரிதற்காய்த் தங்கருத்திற். (கஉகூஉ)

தங்கக்குடமியற்றச்சத்தியவான்யாவனென
யெங்கணுமாராய்ந்துதெளிந்தெங்கைதனை யங்கழைத்துத்.(கஉகூங)

தாம்பூலநலகித்தகுந்தபடிசேர்க்கணக்காய்ச்
சாம்பூனதத்தைத்தனிநிறுத்தங் கேம்பலொடு. (கஉகூச)

பாலித்ததும்கேற்றபாராளைந்தோரிடத்தில்
வேலைநடத்தவிதித்தார்கள் மேலவர்க (கஉகூரு)

ளொப்பக்கருமுடித்தானேங்குமதேபோலுமில்லிற்
செப்பமுடனேர்கருவுந்தீட்டினன் அப்பொன்னூற். (கஉகூசா)

கொத்திலகவார்த்துக்குடமுடித்தானிற்கருவிற்
பித்தளைவார்த்தோர்குடமும்பேணினன் சுத்தமுறத். (கஉகூஎ)

தங்கக்குடமதனைச்சாணைபிடித்தார்ந்தழகு
பொங்கவுநகாசுபுரிந்திட்டான் னிங்கிதுபோற். (கஉகூஅ)

பொய்க்குடத்தையுந்துலங்கப்பூசித்துத் தங்கமலாம்
மிக்கவதிற்பூசிமினுக்கினன் றக்கநல்ல. (கஉகூகூ)

நாட்பார்த்தங்கீசருக்குநல்லபிஷேகம்புரியக்
கோட்பாடுடன்முகூர்த்தங்கொள்ளவிவன் வாய்ப்பாமென். ()

சிந்தைமகிழ்காளிகாதேவிதனக்கெந்நைகயினால்
முந்தியபிஷேகமுடித்தபின்னர் சுந்தரற்குத். (கரு00)

தானபிஷேகம்புரிதல்சாஸ்திரவிதியாமெனமே
லானவதிகாரரதற்கிசைந்து தீநாளைக். (கரு0க)

காலைவழிபாடொடுகின்கன்மம்நிறைவேற்றுகெனச்
சாலவிடைபெற்றுத்தனதகம்போய் மேலெவருந். (கரு0உ)

தாமறியாவண்ணந்தனியிருளிலக்குடத்தை
மாமதிவிலாழ்த்தியெல்லவந்தியனும் சேமமுடன். (கரு0ங)

காலையினிற்சென்றுநகைமுழுக்கத்தோடெழுந்து
கோலமிட்டதங்கக்குடமெடுத்து நாலுமன்னோரா. (௧௩௦௫)

சூழ்ந்துவரமுன்மடிவிற்சேர்த்துக்களகக்குடத்தைப்
பூந்துள்ளமிழ்த்திவிட்டுப்பொய்க்கு கை யேந்திநிறை (௧௩௦௬)

நீர்பொதுள நால்பொலிந்துநீள் மங்குளமுமசெருகித்
தார்புரளத்தன்றலைமேற்றாங்கியே யூர்சுமறன்று. (௧௩௦௭)

சன்னதுய்கொண்டார் களிசோலைசெய் கவிடக்
தன்னைமாகாளிக்கபிஷேகம் மன்னரியற்றி. (௧௩௦௮)

யக்குடத்தைநல்கிவிட்டாருயிரம்பேர் சூழ்ந்திருந்து
மிக்கவடஞ்சற்றுமறிந்தாரிலையே மிங்கயகம். (௧௩௦௯)

போதுகன்றநள்ளிரவிற்போந்தனையிற்கொணர்ந்து
பாதுகந்துவாழ்ந்துபரமுற்றான் சமைதயங்கு. (௧௩௧௦)

வேந்தன்முதலானோர்வெகுநாட்கழிந்தபின்
தேர்ந்தனரப்பால்நமையென்செய்யலாம் நாந்தகங்கொண். (௧௩௧௧)

டெத்தனைபேர்காவலிருந்தாலுநாமவரை
யெத்திக்கவர்தலியற்கையன்றோ வைத்து. (௧௩௧௨)

பழநகையெல்லாமுருக்கிப்பைம்பணிவேறாற்ற
வழிதுறையோடங்குவருவா ரிழையைச். (௧௩௧௩)

சதுரமிசைவைத்தழுக்குத்தட்டுதல்போற்கொஞ்சஞ்
சிதறித்தரையில்விழச்செய்தும் மதையுமெல்லக். (௧௩௧௪)

கண்ணோட்டமிட்டுங்கழிவற்றமீதத்தையொரு
மண்ணோட்டிலிட்டுருகவைக்குங்கால் நண்ணுறுமிய. (௧௩௧௫)

லோட்டினுந்துள்ளியொழுகவிழத்தாட்டிநகை
காட்டியுமுன்கைச்சமர்த்தைக்காட்டுவாய் நீட்டிநகை. (௧௩௧௬)

செய்வதற்குன்பாற்கொடுக்குஞ்செம்பொனிற்கால்வாசியெடுத்
தையமறத்துண்டாயடக்குவைநீ பெய்தெடுத்து (௧௩௧௭)

தங்கமிடைகுன்றுமற்றண்சரிகைவெள்ளியைச்சேர்த்
தங்குருக்கிக்கொள்வைமனமஞ்சாதே தங்கம்பொன். (௧௩௧௮)

னெப்பணியானாலுமிழிகருக்கன்வெள்ளியினிற்
செப்புப்பொடியதிகஞ்சேர்த்தாகி யப்பா. (௧௩௧௯)

கவின்குலவநீபழுக்கக்காய்ச்சியெடுத்தீந்த
வவன்கண்ணில்மண்ணையடிப்பாய் தவிர்ந்திலகு. (கா௨0)

வெள்ளிநகையாகில்வியன்செம்பினைக்கலந்து
தெள்ளும்பணிகளைநீசெய்குவா யுள்ளதுபோற். (கா௨க)

றங்கம்பொன்வெள்ளிகளிற்றான் கலப்பிலாதுசெய்தா
லெங்குழந்தாயீதினமக்கென்னமிஞ்சும் அங்கவர்கள். (கா௨௨)

செட்டிகள்பாற்காட்டிலந்தச்செட்டிகட்கும்நம்மவர்க்கும்
மொட்டியவுட்பேச்சொன்றுளதலவா செட்டிதட்டா. (கா௨௩)

ரொன்றேயொருவர்க்கொருவர்கோட்சொல்வதில்லை
யென்றேமுன்சத்தியமேற்பாடன்றோ அன்றிடுகுள். (கா௨௪)

முன்னைமறம்தெம்மியல்பைச்சற்றும்வெளிவிட்டுநாயா
ரன்னவர்க்குநாமுமதுபோலாம் முன்னுதித்த. (கா௨௫)

கட்டுநாமையீறிக்கலகமிட்டாராகிலவர்
குட்டுகளைநாமுங்குலைச்சுடைப்போம் செட்டிகள்கு. (கா௨௬)

துக்குமக்கசாலையர்குதுக்குமிணைபார்த்திடினுற்
றுக்குறைபொன்றிட்டாலுமொவ்வாதே சிக்குளர்மீமா (கா௨௭)

சத்தைவெளியாக்கித்தலைகுனியச்செய்திடுவே
னித்தருணஞ்சத்தியெனக்கில்லையே யித்தையறி. (கா௨௮)

யாமலுலகத்தவர்தட்டார்மோசக்காரரெனப்
பேய்மதியாற்றூற்றிப்பிதற்றுகிறார் நாமறியப். (கா௨௯)

பாரமிறுகச்சுமந்துபட்டிமாறித்திரிந்த
சிறுமிவர்வாழ்வுந்தெரியாதா பூருவத்திற். (கா௩0)

கட்டினதாலிக்குக்கடைமணியில்லாததுபோ
லெட்டிரண்டும்பூணற்கிடமாச்சு மட்டரிய. (கா௩க)

தங்கநகையாச்சுத்தகுந்தமுதலாக்சுதெழு
மங்குல்படிமாடமனையாச்சுச் சங்கையுடன். (கா௩௨)

ஊரவர்கொண்டாடியுறவோங்கவுமிப்போதுசெட்டி
யாரவர்களென்றொருபேராச்சலவா பூரிவினை. (கா௩௩)

மாந்தர்களாலன்றோமலிந்தகிதிபெற்றனமென்
றுய்ந்துவிசுவாசமனுவுண்டா போங்கபரி. (கா௩௪)

நன்கயர்ந்தசெட்டிகட்குநம்மாற்சகாயமில்லை
யென்பதும்பின்சொல்வேனிருக்கட்டும் பொன்பணிக. (௧௱௩௰௫)

* ஞற்கையினிற்காய்ச்சியுருக்கித்தரோமெனவும்
விற்கநகைசெய்துகொடோமீண்டெனவுந் தற்கமுடன். (௧௱௩௰௬)

நம்மவரொப்பந்தமீட்டுநண்ணுங்காற்பின்னிவர்கட்
கிம்மியுந்தேட்டெய்தற்கிடமுண்டா கம்மியர்கள். (௧௱௩௰௭)

தன்குற்றமேயொழியத்தற்பேணுஞ்செட்டிகண்மே
லென்குற்றநம்புத்தியீனமே புன்கயர்க்கு. (௧௱௩௰௮)

கூவென்றான்மீதிற்கொடும்பகையென்பாரதுபோல்
நாவொன்றிப்பேசுதலுநன்றலவே மாவணிகர். (௧௱௩௰௯)

பொய்ச்செயல்நாமேதூற்றப்போமாமல்லார்துபடுத்
தெச்சிலுமிழ்ந்தாலெங்கிழிந்துவிழும் மச்சுமண்ணிற். (௧௱௪௰)

றனெடுத்தபொற்பணியின்றன்மையுணராதவர்நம்
பானடித்துக்காட்டியிதைப்பாரென்பார் நீநடுக்கு. (௧௱௪௰௧)

றுதவுரைகல்லில்மச்சமாய்பவன்போலேமாத்திப்
பேதையேயீதுசுத்தப்பித்தளையென் றோதியதைத். (௧௱௪௰௨)

தூரத்தேவிட்டெறிவாய்சூதற்றானுண்மையெனப்
பூரிப்பொழிந்தவனும்போய்விடுவான் ஊரிலவன். (௧௱௪௰௩)

போனவுடனவ்விடத்தைப்பூர்த்தியுறத்தேடியெடுத்
தானதையுமுன்போலதுக்குவாய் தானிதுபோ. (௧௱௪௰௪)

லார்நமக்குச்செய்திடுவாரம்புவியோர்தம்பொருட்குப்
பார்வையிடிறுமொருபங்காளி சேர்வையிட்டுத். (௧௱௪௰௫)

தேசுயாத்தகற்பணிகள்சேரவொருசமயம்
மாசகற்றக்கொண்டுவருவர்கண்டா யேசார். (௧௱௪௰௬)

வெடியுப்புவேண்டுமெனமெல்லக்கடத்தி
யுடையான்மீண்டெய்துமதற்குள்ளா யெடுசிலகல். (௧௱௪௰௭)

பற்றுதென்றூசைப்படாதேமடியறுத்துக்
கற்றான்பால்கொள்ளக்கருதுவரோ சொற்றபடி. (௧௱௪௰௮)

---

* உற்கை-தீ. * கையர்-திருடர்.

வேற்றுமையுறுத்தரிப்புமிக்ககறைப்போக்குகளை
மாற்றியதில்யாட்டிமருவிவிடா யேற்றமுள்ளா· (௧௬௪௯)

கூலிகொடுத்தாலுமந்தக்கூலியினால்நம்முடைய
காலக்ஷேபந்தனக்குக்கட்டாதே கோவிநா. (௧௬௫0)

மிட்டதேசட்டமடாயாருமென்னசெய்வரிது
கட்டளைத்துரைத்தனத்தார்காலமே வெட்டவிடக் (௧௬௫௧)

கர்த்தர்களாலுமனைக்கால்வாசிதீட்டும்மை
பொத்தவணிகர்தந்தாலோர்வீசம் எத்தலமும். (௧௬௫௨)

நற்புகழ்ச்சியோங்குசருவத்ரபூஜிதராந்
சொற்புலவர்பொன்னிற்றொடாதேநீ யற்புகந்து (௧௬௫௩)

நாடியிசைபாடினலமுண்டாஞ்சீறியரம்
பாடிலுயிர்மாய்த்துபவசழியும் நீடிநமக். (௧௬௫௪)

கூராருட்கண்வேணுமப்பாவுள்ளூர்ப்பெரியதனக்
காரருக்குமட்டுமெடுகால்வரிசை யூரினுள்ளுந். (௧௬௫௫)

சொற்றிறவாயாடிகட்குந்தொல்லார்சிநேகருக்கு
மொற்றுமையாய்மூன்றிலொருவாரம் மற்றகுடி· (௧௬௫௬)

யானவர்க்குநம்மவர்க்குமன்றேசெம்பாதியெனத்
தானெழுதிவைத்தனர்முதாளரே யானாலும். (௧௬௫௭)

காலமறிந்துகவர்வாயென்றேபுகலப்
பாலன்மகிழ்ந்துபணிவுதலாய்ப் போலியரா. (௧௬௫௮)

மேழைகளுக்கெவ்விதமென்றேகினவச்சீறிபடா
பாழ்படுவோயன்னவர்க்கு [illegible] பேழைகளசொத். (௧௬௫௯)

தவ்வளவுநம்மதுவேயார்க்குந்தெரிந்ததன்றோ
வவ்வுதொழிற்கல்லாமடைப்பயிலே யிவ்வுலகி. (௧௬௬0)

லிப்படியாநீபிழைக்கப்போராயெனவுதைத்துப்
பொய்ப்படுவோன்றன்னுயிரைப்போக்கி [illegible] செப்புமுலே. (௧௬௬௧)

மாதேயவனைவெருவாஞ்சையுறக்கொண்டிடினுந்
தூதேபுரியுந்தொழிலுடையார் கோதே. (௧௬௬௨)

நிறைந்தகனபுளுகர்நித்திரையிலேனு
மறந்துநிசமுரைக்கமாட்டா ரறந்தவாச். (௧௬௬௩)

ஜவிதப்ரமாவெனுந்தேவாமிஷையாற்பூமிசையுற்
றய்விசுவகோத்திரமுடையாரால் வையமிசை. (௧௫-௮௦)

மின்னுலவுகோவில்குளமேலாலயப்ரதிஷ்டை
மன்னியபூண்தேர்களுயர்வாகனங்கள் பின்னுமுள. (௧௫-௮௧)

வெல்லாச்சிறப்புகளுமெய்திநலம்பெற்றிடுதல்
வல்லாரவர்தொழிலின்மாக்ஷியன்றே வல்லாரில். (௧௫-௮௨)

ஆற்றலுறுநாற்றொருவராயிரத்திலேயொருவ
ரெற்றமுளநல்லோரிருக்கிறார் தோற்றமிகும். (௧௫-௮௩)

தென்மதுரைமாநகரிற்றெற்குலவும்வீதியினிற்
றன்மதுரைபோலுந்தழைக்திருப்போன் பன்மலர்க்காக். ()

கந்தவழுங்கானூர்க்கணபதியாசாரிதிரு
மைந்தர்களிலாறுமுகமாலென்றும் செந்திருவைச். (௧௫-௮௫)

சார்ந்தசிவகங்கைச்சமஸ்தானராசர்மெய்க்கத்
தேர்ந்தாயவேலைத்திறமையினான் சேர்ந்தொளிருங். (௧௫-௮௬)

கற்புரநூல்மார்பன்கணபதியாசாரியருள்
சற்புனிதவான்ராமசாமியென்றும் அற்புதமாய்த். (௧௫-௮௭)

தெள்ளித்தெளிந்தபுகழ்த்தென்னைகயாகுசேன்
பள்ளித்தெருவிற்பயில்கனவான் ஒள்ளியசீர்த். (௧௫-௮௮)

தஞ்சைநகர்வாழ்ராமசாமியாசாரிதவ்
மஞ்சனென்னவந்துதித்தவாய்மையினான் விஞ்சுதமிழ்க். (௧௫-௮௯)

கல்விபரசங்கமுள்ளான்கற்றோர்க்கமுதமன்னான்
நல்விற்பனனுலகநாதனென்றும் பல்குசுவை. (௧௫-௯௦)

முத்தமிழ்போல்முப்பொறிபோல்முக்கனிமுப்பால்போலு
மொத்துலகில்வந்துதித்தவுத்தமர்கள் சுத்தமுறக். (௧௫-௯௧)

கோலமணிகுயிற்றுங்குந்தனவேலைத்தொழிலுஞ்
சாலவுநகாசியற்றுந்தாட்டாளர் வேலையினிற். (௧௫-௯௨)

கள்ளங்கவடறியார்கன்மஷஞ்சற்றேனுமில்லா
ருள்ளும்புறம்புமொத்தவுண்மையார் வள்ளலென. (௧௫-௯௩)

யெய்த்தபுவிமன்னர்களும்மேன்மைப்ரபுக்களுந்தஞ்
சித்தமதிற்கொண்டாடுஞ்சீர்த்தியினா ரித்தலத்தின். (௧௫-௯௪)

தான்செறிந்துமேவுமக்கசாலையரனேகரிலும்<br>நானறிந்தமட்டிலிவர்நாணயாகள் தானுமெனக். (௧௩௯௫)

கந்தரங்கபத்தியுளாரன்னவர்பாலெய்தியிளம்<br>பைந்தோடிநீசொன்னபடிமுடித்துச் சிந்தையினி. (௧௩௯௬)

லன்புருகயானேயணிந்தழகுபார்ப்பேனென்<br>றின்புறவெந்நாளுமெனையேய்க்கிறார் பொன்புனையல். (௧௩௯௭)

சேரவெடுத்தாலுமவர்செய்பார்நீநாணயமாய்த்<br>தாரதுண்மையானுற்றருகிறேன் ஊரிலெனைச். (௧௩௯௮)

சிந்திநகைக்கத்தெருவிலலையவிட்டுப்<br>பாந்திநின்றுவேடிக்கைபாராதே காந்தனே. (௧௩௯௯)

பொல்லாவெனன்றின்னபுகல்போதுடல்குழையப்<br>பல்லாடிமெத்தப்பயந்தவன்போல் நல்லாய்நீ. (௧௪00)

றொன்னமொழிசொன்னீர்திருசெவியினூராசந்<br>துன்னியபோற்றேகந்துடிக்குதே நன்னயமுறப். (௧௪0௧)

பட்டணத்திலேமூவர்பண்புடையரொன்றுமற்றோர்<br>கெட்டெணத்தைக்கொண்டகெறுவொன்றுந் தொட்டணைத்த. ()

நாயகன்சொற்கேட்டுநடுங்காதெனைப்பார்த்து<br>வாய்கொள்ளாவார்த்தைவழங்கினீர் தீயதொழிற். (௧௪0௩)

சின்னமொறுக்காத்திருட்டுப்பயல்களைப்போ<br>லென்னையொருக்காலுமனத்தெண்ணாதீர் கன்னக்கோல். (௧௪0௪)

சாந்துமிடமென்றுஞ்சாத்தாவிடமென்றுஞ்<br>சீத்துவமிதார்க்குந்தெரியாதோ ஆத்தாடி. (௧௪0௫)

மற்றவரைப்போனினைத்துமாதாபிதாவிடத்துங்<br>கற்றவித்தைகாட்டுங்கருத்துண்டோ சுற்றிமெல்ல. (௧௪0௬)

யேய்க்கின்றகூத்திக்கிடுமருந்தையன்றுபெற்ற<br>தாய்க்கிடுவருண்டோசரசமாய்ப் போக்கிரிக. (௧௪0௭)

ளீனத்துலத்தாவிழுக்கேயென்போலனைய<br>மானஸ்தர்க்கெல்லாம்வசையாச்சே ஞானத்திற். (௧௪0௮)

றேற்றமிலானுன்கணவன்சீசீயெவரிடத்துங்<br>கீற்றிலுநம்பிக்கைகிடையாதே மாற்றலரும். (௧௪0௯)

போற்றுபுகழ்நல்லதுக்கோர்பொல்லாதுபோலுமுமக்
கேற்றமணவாளனிவனுமோ — சீற்றக். (௧௪௧௦)

கடுஞ்செட்டுக்காரனிதைக்கண்டிடிலப்பாடா
குடும்பத்தினேருங்குழப்பம் — நெடுங்காலம். (௧௪௧௧)

பேச்சுவிளைந்துபிணக்காயிருவருக்கும்
மாச்சரியச்சண்டைவளருமே — மூச்சுவிட்டால். (௧௪௧௨)

வம்புவருமேவெளிக்குவாராவிதமிதனை
யெம்பிறர்க்குங்காட்டாதியற்றியே — ரொம்பவுநாள். (௧௪௧௩)

மிச்சமிலையஞ்சாறுவேளையிற்காதுங்காதும்
வைச்சதுபோற்றுரேன்மகனுனை — யச்சமற்றுச். (௧௪௧௪)

சும்மாகொடுப்பீருஞ்சொற்படியோநம்பணியா
யெம்மாலோரட்டியிலாதீந்திடுவே — னும்மவர்க. (௧௪௧௫)

ளற்புதநீராடையிலோடாணிகழன்றுபல
கற்பணிபோச்சென்னக்கவலையுற்றார் — சிற்பவிதிச். (௧௪௧௬)

சூத்திரத்தாலன்றிச்சுழலாத்திறகணியாய்
வார்த்துவலுவாயிறுக்கிமாட்டுவேன் — நேர்த்தியுள்ள. (௧௪௧௭)

மாதிரிபைக்கண்டுமடவார்பொருமையுற்றுக்
காதலனைப்போட்டுக்கசக்குவர்கள் — சோதனையில். (௧௪௧௮)

மின்றிகழ்மாற்றொன்பதுக்குமேலிருக்குஞ்சேதாரங்
குன்றியிடையேனுங்குறைவுபடா — தென்றைக்கும். (௧௪௧௯)

கட்டுக்குலையாதுகண்காரச்செட்டிகள்பால்
வட்டமறக்காட்டிமதிப்பிடுவீர் — மட்டுமலர். (௧௭00)

மாதாவனையாயிலேயுமழகுக்
கோதாபணிதியிதையுருக்கிப் — போதுமிடை. (௪௭0௧)

யிக்கணமேதாரேனிதுபோகக்கையிருப்பு
ரொக்கமுள்ளதெல்லாமுதவுவீர் — லக்கினநல. (௧௪௨௨)

வேளையிதேதங்கம்விளைவாகவாங்கிவந்து
நாளைமுதல்வேலைநடத்துவேன் — கேளம்மா. (௧௪௨௩)

வீட்டுக்குமெய்தவிருந்தினர்வந்தார்களிதம்
கேட்டியவெற்கூலியினிலேதேனு — நீட்டுமென்று. (௧௪௨௪)

சாலமிட்டுச்சொல்லவிவள்தன்னினைச்சழுப்பாலே
மாலையிட்டோர்கஞ்சாதமாகீலி — யோலமிட்டுக். (௧௪௨௫)

கொல்புலியாத்தோல்போர்த்தகொள்கையான்றன்னைமெத்த
நல்லனிவனென்றேநனிமதித்துச் சொல்லரிய. (க௪௨௬)

பொற்குழையைமேலோடுபலபூஷணமுநல்கிவிட்டாள்
மற்சடத்தையொத்தாதியில்லாள் சிக்கி. (க௪௨௭)

யுருவியகோலானுளுபர்சகடயோகந்
சருவியதாமெனவுந்தட்டான் விரைவுடன்றம். (க௪௨௮)

வீட்டிற்புகுந்துரியமெல்லியற்குக்காட்டியவள்
வாட்டமுற்றகண்ணீரைமாற்றினான் நீட்டியநற். (க௪௨௯)

றண்டுலமுங்காய்கறிகள்சாமான்பதார்த்தமெல்லாங்
கொண்டுவந்துமாளிகையிற்கோட்டினான் கண்ணடையிட்ட. (க௪௩0)

சோமன்வயிரக்கடுக்கன்சோதிதிகழ்மோதிரத்தில்
மாமணியுந்தீட்டிவனைந்திட்டா னுமுடையாட். (க௪௩௧)

கந்தவளைவிட்டானலங்காரப்பட்டெடுத்தான்
மெத்தநகைபூட்டிமினுக்கிவிட்டான் நத்தும். (க௪௩௨)

குழந்தைகளுக்கேற்றகுறும்பணிகள்பூட்டி
வழங்கவுளமீதுமகிழ்ந்தான் கிறம்படுதாய். (க௪௩௩)

சாடையிலேபார்த்துமகன்றம்பானெருங்கியிந்த
வாடையிலேநான்கிடந்துவாடையிலே மேலடியவ. (க௪௩௪)

பஞ்சனைமைக்காரியதிபசப்புக்காரிமகா
பஞ்சரிப்புக்காரிபயில்க்காரிக் கந்தியந்த. (க௪௩௫)

நாச்சியாருக்குமட்டுநல்கினையோநானிருக்குங்
காட்சியைநீகண்ணாரக்காண்கிலையோ வாய்ச்சநெடுங். (க௪௩௬)

காலமகவில்லாமற்கன்றியுனதகத்தனொடு
சாலவும்யானெய்திநலங்கள்சுற்றி மேமெல்லனவுங். (க௪௩௭)

கண்டகண்டகோவிலுக்குங்காணிக்கைதான்செலுத்தி
யண்டரியதீர்த்தங்களாடிவந்துந் தொண்டர்களா. (க௪௩௮)

மாண்டிபரதேசிகளுக்கன்னம்படைத்துமிக
நீண்டவரசுக்குநிதநீர்வார்த்துந் தேண்டரிய. (க௪௩௯)

தீக்கையுபதேசமுற்றுஞ்சேனைவிரதம்புரிந்தும்
ஊக்கரியகெற்பமுறலானேன் ஆக்கையினிற். (க௪௪0)

பச்சைநரம்பெய்கமதிபத்துஞ்சுமந்துநிறைந்
தொச்சமறப்பெற்றேனுன்னைமணிபோற் செச்சைநறு (௧௪௪௧)

நீராட்டித்தாராட்டிநீடம்புலிகாட்டிப்
பாராட்டிச்சீராட்டிப்பாதுற்றேன் ஓர்வேளை. (௧௪௪௨)

நோயணுகக்காணில்மனநோனொருமருந்துக்
காயடவித்தோறுமலைந்துழல்வே னோயாம (௧௪௪௩)

லெத்திறத்தும்பட்டேனிராப்பகலோர்போதிலுங்கண்
ணித்திரைசற்றுண்டாகினவுண்டோ முத்தனையாய். (௧௪௪௪

நீபிறந்தோராண்டுநிறைவுறுமுன்னுந்தை
றிபறந்துகாட்டினிடைச்சென்றெரிந்தான் சோபமுற்று. (௧௪௪௫)

வண்ணக்கலைபிறந்தமான்போலொளிமழுங்கி
மண்ணிற்படிந்தமணியேபோல் பெண்மைக. (௧௪௪௬)

குரியநிறைமலறுதாழியத்திப்புக்குண்
டரியபலகஷ்டமடைந்தேன் இருநிலத்தி. (௧௪௪௭)

லுற்றாருக்குற்றாருறவோமற்றில்லதுகை
யற்றார்க்குதவியுமன்புண்டோ பெற்று. (௧௪௪௮)

றிருந்தும்பயனிலவாலெவ்வுயிருங்காக்கும்
பரம்பொருளேதஞ்சமெனப்பற்றி வருந்தியுனைப். (௧௪௪௯)

பொன்னாலலங்கரித்துப்போஷித்துருகிருந்து
மன்னர்மக்கள்போலும்வளர்த்தேனே தென்மொழியுஞ். (௧௪௫௦)

சாதித்தொழிலும்வெகுதந்திரமுமந்திரமும்
போதித்துவைத்தனர்நம்புண்ணியர்கள் காதலநீ. (௧௪௫௧)

வெண்ணுஞ்சிறுபருவத்தேநன்மணமுடித்துக்
கண்ணாற்களித்துக்கதிபெறுவா னெண்ணியெண்ணி. (௧௪௫௨)

யெத்தனையோபெண்ணணைந்துமென்னுளமொப்பாமலுஞ்சொந்
தத்திலிவள்நாத்திமகளாதலால் மொத்தையிரு. (௧௪௫௩)

நான்குவருடஞ்சமைந்துநாற்றமெடுத்துக்கிடந்தாள்
நீங்கரியமூளிநிறங்கெட்டாள் யான்கருத்தும். (௧௪௫௪)

றன்றேபெண்பாவமிவட்காதாரம்வேறிலைநம்
சொன்னபடிகேட்குஞ்சுகிர்த்துமுண்டாம் பின்னடியிற். (௧௪௫௫)

பெண்ணடியில்லாநமக்குப்பின்றளர்ந்தகாலமதி
லுண்ணடியாதொட்டுமுதவுமென்றும் பெண்ணீ. (கசருசு)

ரணைகடந்தநீலிக்கழகில்லாதேனுங்
குணமிருந்தாற்போதுமெனக்கோரித் துணிபுறநான். (கசருஎ)

வேணுமென்றுகொண்டுவந்தவெங்கஞ்சிறுக்கிமக
ளரணவமாயென்னையவமதித்தாள் கோணிமன. (கசருஅ)

நாணித்தலைகவிழநாவெடுத்துப்பேசவொட்டா
தாணித்தரமாயடக்கிவிட்டாள் வீணிலவச். (கசருகூ)

சேட்டையுறப்பேசித்தெருவிலுள்ளபேர்கடமைக்
கூட்டமிட்டென்குட்டைக்குலைக்கிறாள் கோட்டிகொண்ட. (கசசுo)

நாயினுங்கேடானேனோர்நாளேனுமத்தையென்று
வாய்குளிரச்சொன்னவசனமுண்டோ பேயுமஞ்சக். (கசசுக)

காத்திரநீலிக்கோலங்காட்டியவளாடுகின்ற
கூத்துக்குமத்தளநீகொட்டுகிறா யாத்தாளென். (கசசுஉ)

னன்புடையாட்கேனீயடங்கிடந்தாயிலையென்
றென்பொடியத்திட்டவுன்றலைலாதே வன்புளையா. (கசசுங)

யேண்டியகங்காரமுனக்கிவ்வளவாவென்றுபுடைத்
தாண்டடக்கினலலவோ அஞ்சுவாள் ஈண்டெதிர்நீ. (கசசுச)

பார்த்திருக்கப்பேசும்பழிப்புரையைக்கேட்டுமொரு
வார்த்தைகண்டிப்பாய்சொலவும்வாயிலையே சேர்த்து. (கசசுரு)

மனையாளைமஞ்சத்தில்மைந்தனைநெஞ்சத்தில்
வினையாளைவேலைமுடிவில் லெனமுதியோர். (கசசுசு)

தக்கவுரைதேர்ந்துஞ்சரணஞ்சரணமென்றே
விக்கியவள்காலடியில்வீழ்கின்ற யெக்குலத்தி (கசசுஎ)

லானாலுமுன்போலறிவிலரைக்காணேனீ
தானுபெண்கொண்டாய்தரணியினில் மேனாளோர். (கசசுஅ)

வண்ணாரட்பையல்மனையாட்டனைக்குறித்தன்
றெண்ணுதிராமனையங்கென்சொன்னான் கண்ணுறுக்கும். (கசசுகூ)

நாட்டமவள்கண்டுநடுநடுங்கவேண்டாமா
ஓட்டையெனக்கால்வழிநீரோடாதா சேட்டைபண்ணித். (கசஎo)

தாங்குவதனாலுன்றலையில்மிளகாயரைத்துத்
தீங்கரியசட்டஞ்செலுத்துகிறாள் ஈங்கிவள்தன். (௧௪௭௧

னாக்கையழுத்துப்பறாக்கினாலன்றோவென்
தீர்க்கவிராக்யசினந்தீரும் யேற்கையினீ. (௧௪௭௨)

சன்னதங்கொண்டாடத்தலையணையின்மந்திரத்தா
லென்னவிதஞ்சொல்லியுருவேற்றினளோ பொன்னினுநற். (௧௪௭௩)

றாயலவாவென்றுபக்ஷாத்தாபமின்றிநேற்றுவந்தாள்
மாயையிலேவீழ்ந்துமயங்கினையே தீயர்களு. (௧௪௭௪)

மேசையிடங்கொடுத்தாயென்செய்வாயானுமதைப்
பேசுவதிலென்னபெறப்போறேன் பீசிலுனைக். (௧௪௭௫)

காறுமுழந்தான்பெரிதோவப்பாநீநல்கிலெனைக்
காறுமுளந்தானென்றாளாங்கெழுந்து சீறியொரு. (௧௪௭௬)

## மாமிக்கும் மருமகளுக்குஞ் சண்டை.

வன்புலிபோற்பாய்ந்துமருமகள்தன்மாமிமுன்னின்
றென்புகன்றாயின்னமியம்புவாய் முன்னமிரு. (௧௪௭௭)

நாலுவருடஞ்சமைத்துநாற்றமெடுத்தாளென்றும்
மேலழகில்லாமூளிவேசையென்றும் ஞாலமதிற். (௧௪௭௮)

சீந்துவாரற்றுத்திரிந்தவளைக்கொண்டுவந்து
வாய்ந்தநம்மனையில்வைத்தனென்றுங் காந்தனிடஞ். (௧௪௭௯)

சொல்லிப்புரிசழித்ததோஷிக்குரங்கேயுன்
பல்லைப்பிடுங்கவொருபல்லிலையே யல்லல். (௧௪௮௦)

தடக்கற்றநெஞ்சைவகிர்ந்தாறுகூறாக்கித்
தொடக்குற்றநாவைத்துணிப்பேன் விடக்கெடுத்த. (௧௪௮௧)

வங்குபற்றிப்பேய்நாயேவாயிலிடும்பானையே
சங்கைகெட்டுப்போனாயேதானாயே பங்கமுற்ற. (௧௪௮௨)

வெங்கலங்கழுதாய்விருதா * வெறுங்கழுதா
யெங்கெங்கழுதாயிரப்புணியே பொங்கும்பா. (௧௪௮௩)

லூட்டிவளர்த்தாலுமுயிர்தீர்விடமளிக்கும்
மோட்டரவையொத்தமுழுநீலி நாட்டிலுனே. (௧௪௮௪)

* வெறுங்கழுது - வெறும்பசாசு.

நல்லவளென்றுருரைப்பார்நாறச்சவமேயுன்
சில்வாயைப்பேர்த்துத்திருப்பட்டா வல்லிருளிற். (கசஅரு)

பூசலிடுபேய்க்கணமேபோழ்வாய்க்கிழட்டோரி
பேசுவதைப்பாரப்பாபெப்பெப்பே மாசுபட்ட. (கசஅசு)

வாருகோலாலுடலைவாட்டியெடுப்பேனுனக்கிங்
கார்சலிகைசொல்வாயறையிறேன் பாரெனவே. (கசஅஎ)

காறியுமிந்தாளிவளுங்காறியுமிழ்ந்தாள்மருகி
தூறியிரைந்தாளிவளுந்தூறினாள் மீறி. (கசஅஅ)

யிடித்தாள்மருமகளங்கீண்டெழுந்துமாமி
கடித்தாளொருகரத்திற்கவ்வித் துடித்தவளும். (கசஅகூ)

பற்றிமயிரைப்பிடித்தாள்பாழ்ங்கிழவிவவ்வால்போற்
றொற்றிமயிரைப்பிடித்துத்தொங்கினான் சிற்றிடையிற். (கசகூ0)

றுத்தாரிப்பட்டுமெல்லச்சோர்ந்துநழுவியந்த
வித்தாரிகால்சறுக்கிவீழ்ந்திட்டா ளத்தருணம். (கசகூக)

மாலேறிக்கொண்டமருமகளைப்போட்டமுக்கி
மேலேறிக்கொண்டாள்விசைக்கிழவி கோலியமூ. (கசகூஉ)

தாட்டியாளுலுந்தயங்குசமயத்தினல்ல
வேட்டைவந்துசாய்த்தால்விடுவளோ ஆட்டமெல்லாம். (கசகூஙு)

கண்டுவிலக்கியவன்காதலியைச்சீர்திருத்தி
நுண்டுகளைநீக்கிநொசிவகற்றிப் பண்டுபெற்ற. (கசகூச)

## தட்டான் தாயைக்கோபித்தல்.

வன்னைமேற்கோபமதிகரிக்கப்பின்னுமன்னை
தன்வதனநோக்கியிவைசாற்றுவான் யென்னிருகண். (கசகூரு)

ணாட்டியுடனீசரியோஅஞ்சாக்கிழப்பதரே
போட்டிபண்ணிச்சீரழிஞ்சுபோகாதே தாட்டுறுத்தும். (கசகூசு)

பாதுகைபோலொத்துப்படிந்துநடவாவிடிலென்
பேதையவளப்படித்தான்பேசுவாள் வாதுபடு. (கசகூஎ)

பேயிறைஞ்சுநீர்மையினுள்பேசியெனைத்தூஷணமா
யாயிரம்வைதாலுமெனக்கானந்தம் வாயிற். (கசகூஅ)

றிருகிருந்தசொல்லாற்சிலர்புறணிபேசி
யருகிருந்தாற்போதுமெனக்கன்பே யிருள்செறிந்த. (கசகூகூ)

பாதகமலம்படிந்தபாவியேன்மீதிலவள்
பாதகமலம்படிலென்பாவம்போம் கோதி. (கரு00)

லவளேயென்றெய்வமவளேயென்செல்வ
மவளேயென்கல்விநிறையாஸ்தி யவட்கினமுங். (கரு0க)

தங்கப்பணியிடுவேன்தாவுகுழற்பூமுடிப்பேன்
குங்குமப்பொட்டிட்டுமுத்தங்கொஞ்சுவேன் செங்கையினல். ()

மஞ்சளரைத்துங்கொடுப்பேன்வண்ணமலர்க்கால்பிடிப்பேன்
இன்சொற்படிநடப்பேனென்னிஷ்டம் நெஞ்சிலுனக். (கரு0௩)

கேண்டிபொருமையிதற்கேனேவயிற்றெரிச்ச
லாண்டான்கிடைத்தவளதிர்ஷ்டம் வேண்டியொற்றைக் (கரு0ச)

கால்மேற்றவமிருந்துகர்ப்பமுற்றுப்பெற்றுளாம்
வால்தலையைக்கிள்ளிவளர்த்தாளாம் பாலப். (கரு0ரு)

பருவமணஞ்சூட்டியெனைப்பார்த்தாளாமுள்ளத்
தருமையுறக்கொண்டாடினாளாம் மருமகளோ. (கரு0சு)

வைத்தவரிசைக்குமதியாதிவளையவ
ளத்தையென்றுசொல்லியழைக்கலையாம் மெத்தமெத்தத். (கரு0எ)

தோதலித்துப்பேசுஞ்சுணைகெட்டமூளியுனக்
கேதமைத்தநான்கினிலொன்றேனுமே காதகியுன். (கரு0அ)

கோலவுடல்கூனிக்குறுகித்தளர்ந்துமின்னஞ்
சாலவகங்காரந்தளர்ந்திலவே வாலிபரா. (கரு0கூ)

யெண்ணரியபேர்மடிந்தாரியாதோவுன்வல்லுடலை
மண்ணரியுங்காலம்வரவிலையே திண்ணியவெங். (கருக0)

கூற்றுவனுமுன்னுயிரைக்கொள்ளாதகலநின்று
ஞற்றியநின்கொடுமைக்கஞ்சியன்றோ வேற்றுருவ. (கருகக)

நீலியெனவந்துதித்தாய்நீதொலைந்துபோமளவு
மோலமிட்டபூசலொழியாதே வாலொடுக்கிப். (கருகஉ)

பேசாதேபோவெளியிற்பேயேயெனச்சினந்து
கூசாதேபூதிக்கொடைகொடுத்தான் நேச. (கருகஙு)

மருமகனையன்றுமருவீடழைத்தான்
பரிசனமற்றியார்க்கும்பகர்ந்தான் மருகனுக்கு. (கருகச)

நற்சரிகைக்கட்டுவர்க்கநல்கினான்றன்மகட்குப்
பொற்சரிகைப்பூண்பலவும்பூட்டினான் பற்பலகாற். (கருகரு)

பந்திவிருந்திட்டான்பலகாரவர்க்கமிட்டான்
புந்திமகிழ்சிருதவிப்போக்கினான் சந்ததமும். (கருகசு)

வாதாட்டுவேசையர்கள்மாயப்படுகுழிக்குஞ்
சூதாட்டுங்கோலித்தொடர்புற்றான் காதாட்டிச். (கருகஎ)

செல்லநகைபூணச்சிறுதேட்டுச்செல்லியன்றாள்
நல்கும்பொருளைத்தும்நாசமாய் வல்விலங்கிற். (கருகஅ)

## நகைசெய்யக்கொடுத்தவள் தட்டானைக் கேட்குதல்.

காட்டானையுண்கனிபோற்கையிலொருகாசுமில்லா
தோட்டாண்டியானென்றெண்டுங்கினான் சூட்டு. (கருகசு)

நகைமுடிந்ததாவெனவுநங்கைவரிலெல்லா
நகைமுடிந்ததென்னகடித்துப் பகலிரவும். (கருஉ0)

பட்டரைவைத்தேவேலைபார்க்கிறதுபோலுமொன்றைத்
தட்டுவதுஞ்செம்புருக்கிச்சாய்ப்பதுவு மட்டழலிற். (கருஉக)

பித்தளையைக்காய்ச்சியிந்தப்பேதைசெவிவிடைக்கச்
சுத்தியல்கொண்டெத்தித்துவைக்கிறதும் மெய்த்திடுமுன். ()

றேட்டில்நகைவையாதேசின்னாளிலிப்படியே
நீட்டுவல்பாரென்றுநம்பிநீட்டுவதும் மீட்டிவளை. (கருஉங)

யேறிட்டுப்பாராமலேந்தியபின்னற்கொடியை
யேறிட்டிருப்பவன்போலேய்க்கிறதுஞ் சீறியதைக். (கருஉச)

காட்டென் றுரைக்கிற்கடுகடுத்துப்பேசிவே
காட்டமுடனோர்தகட்டைக்காட்டுவதுந் தீட்டிநகை. (௧௫௨௫)

வேலையெலாந்தீர்ந்ததினிமேலிரண்டுநாட்பிடிக்குங்
கூலியினிற்சொச்சங்கொடாததேன் ஏல்வையொடு. (௧௫௨௬)

இட்டவட்டமாயொழுங்காய்ச்சேர்மானமாக்கியதை
யொட்டியபின்றோணுமுருப்படியாய்க் கிட்டுமெனச். (௧௫௨௭)

சொல்லிவெகுநாட்கடத்தித்தோகையினிலேசில்விடாள்
மெல்லவிதைவிட்டுவெளியேறிச் செல்லுவதே. (௧௫௨௮)

## தட்டான் ஊர் விட்டோடுதல்.

பேரளப்பென்றோர்ந்தவன்பெண்டீர்க்குமட்டும்வற்புறுத்திக்
கேரளத்தைநோக்கிவைச்சுக்கிண்ணினனே பாரியதன். (௧௫௨௯)

## நகைக்காரி புலம்பல்.

பொன்னிழக்தமங்கையிந்தப்போக்காளிபோனவிடந்
தன்னையறியாமற்றடுமாறி யென்முதலைத். (௧௫௩௦)

தட்டானென்றெண்ணியல்லோசாதித்தேன்கட்புலனிற்
றட்டானையெங்குநின் றுசாதித்தா யெட்டாநாட். (௧௫௩௧)

போட்டுவிடுவேனெனவும்போதித்தசொற்போலும்
போட்டிபண்ணிவாயில்மண்ணைப்போட்டனேயியா விட்டிலுந்தன்.

மங்கையுனைக்காணனென் றுமாரீசம்பண்ணுகிறு
ளெங்கேபறந்தாயிடந்தெரியேன் சிங்கலுற்ற. (௧௫௩௩)

கொள்ளைக்கழிச்சலுனைக்கொண்டுபோய்விட்டனவோ
துள்ளத்துடிக்கச்சுருண்டாயோ கள்ளரவம். (௧௫௩௪)

பற்றிப்பிடுங்கினவோபாரச்சடாமுனிதா
னெற்றியுனைப்பாய்ந்தெங்கெறிந்தனவோ வெற்றிடியுன். (௧௫௩௫)

மீதுவிழுந்தனவோவெந்துகரிந்துகவிப்
போதியமனூரிற்புகுந்தனையோ ஆகிநகை (௧௫௩௬)

முற்றுங்கவர்ந்துவெறுமூளியாக்கினையே
பற்றியெரியுதடாபாழாவாய் — பெற்றமகன். (௧௫௩௭)

தன்றலையின்மீதடித்துச்சத்தியமுஞ்செய்தனையே
நன்றுடையானென்றலவோநம்பினேன் — என்றலைவன். (௧௫௩௮)

புற்றுக்குரைத்ததுபோதித்தபுத்தியெல்லாஞ்
சற்றுமதியாதுவிட்டேன்சண்டாளி — மற்றுமிந்த. (௧௫௩௯)

ஊரிலுள்ளபாவிகளுமுண்மையுரைத்தாரிலையே
யாருஞ்சத்ராதியெனக்கானரே — போராடிப். (௧௫௪௦)

பற்பலநாளென்கணவன்பல்லைக்கடித்திந்த
சொற்பச்சாமானதிலுஞ்சோமாறி — யற்பகலா. (௧௫௪௧)

யீயாயெறும்பாயிதுகாலந்தேடியதைப்
பேயாய்க்காத்திருந்தபெற்றிபோற் — றேயாமற். (௧௫௪௨)

பையடக்கமாகப்பவுன்பவுனாய்வைத்திருந்த
கையடக்கமெல்லாங்கவிழ்த்தேனே — வையமதிற். (௧௫௪௩)

நீதறவியார்பொருளைத்தீயார்கொள்வாரெனவு
நீதிமொழியென்னினிசமாச்சே — காதலனே. (௧௫௪௪)

வேற்கையிலேசும்மாவிரானேபொருளேமுன்
மூர்க்கனவன்பொல்லாமுரடனே — தோற்குமிதைக். (௧௫௪௫)

கேட்டானேயாகிற்கிடுகிடுக்கவேமூளும்
போட்டுக்கடாவிப்புடைப்பானே — மூட்டிவதை. (௧௫௪௬)

மாற்றமுறப்பேசியெந்தன்றுயங்கிஷத்திலுள்ளவர்க்கு
மேற்றமட்டுமேற்றியிறக்குவனே — தூற்றிமொழிந்தி. (௧௫௪௭)

வாயிலவனேர்ந்தபடிவைதாலும்வைதிட்டும்
பாயிலிலென்கிட்டப்படுக்கானே — நோயென்ப. (௧௫௪௮)

தெத்தனையுற்றாலுமருந்தேயுண்பதில்லையிச்சா
பத்தியத்துக்கல்லோபயந்தும — ஸ்ரீமாநி. (௧௫௪௯)

பொன்னுக்குப்பொன்னிழந்துபோகசுகமிழந்திங்
கென்னத்துக்காய்நானிருக்கிறேன் — அன்னன்னே. (௧௫௫௦)

சுற்றத்தார்க்கீந்தேனேசூழ்கருப்பாலாதார
மற்றவர்க்கேதேனுமளித்தேனே — மற்றுமடங். (௧௫௫௧

கோவில்குளமுண்டுபண்ணிக்கோடிபலன்பெற்றேனோ
பாவியிலும்பாவியெனப்பட்டேனே தீவினையே. (௧௫௫௨)

னென்செய்வேனென்செய்வேனென்றுருகிக்கன்றியவள்
பன்மூன்றுநாளாய்ப்பரிதபித்துப் பின்னிதனைக். (௧௫௫௩)

கொண்டவற்குச்சொல்லமனங்கூசிப்பயந்தூமை
கண்டகனுப்போலுங்கலங்கினளே மண்டலத்தி. (௧௫௫௪)

லிப்படியேமாதரெழிலார்ந்தமுற்பணியுங்
கைப்பொருளுந்தோற்றக்கழிந்தவரா யெப்பொழுதும். (௧௫௫௫)

பொற்பிழந்துசித்தப்புலனிழந்தங்கூணிழந்து
பற்பிளந்துகூவிப்பதைத்தனராற் சற்புருடர். (௧௫௫௬)

சீருயர்ந்தாரேனுந்திகழ்பணியிற்சிந்தையுண்டோ
நாரிகட்கேனிந்தநகைமயக்கம் நாரியர்கள். (௧௫௫௭)

நாணமடமச்சம்பயிர்ப்பென்னுநால்வகையாம்
பூணையணியாய்ப்புனைந்தறனைப் பேணியுந்தன். (௧௫௫௮)

கற்பியல்வழாமற்கடிமனையைச்சுத்தமிட்டுப்
பொற்புடனுடோறும்புனலாடி யிற்புகுந்து. (௧௫௫௯)

சட்டரசவுண்டிதயாரித்தவர்கணவற்
கிஷ்டமுடனூட்டலியல்பன்றிச் செட்டிதட்டான். (௧௫௬0)

வீடேகெதியாய்மெனக்கெட்டலைந்துசுடு
காடேபோமட்டுங்கலங்கலனென் ருடவனை. (௧௫௬௧)

மோதும்பிடாரிகளைமுற்றுந்துறந்துவன
மீதுறையும்வாழ்க்கைமிகநன்றே தோதகஞ்செய். (௧௫௬௨)

மாதர்மனைமிதியேன்வாயுறவுஞ்செய்தறியேன்
காதலனைப்பேணுங்கவலையன்றி யாதுங். (௧௫௬௩)

குறியேன்கொடுங்கூற்றுயிர்கொண்டுபோம்போ
தறனன்றிவேறுதுணையாமோ திறமையுணர்ந். (௧௫௬௪)

தில்லுக்கிசைந்தொழுகாளேற்றமிகுகூற்றமெனுஞ்
சொல்லுக்கிடம்படுத்திச்சோராமல் நெல்லுக்! (௧௫௬௫)

குமியேபோலாதரமுற்றும்மிதபமேற்கத்
தமியேனடாத்திவருந்தன்மை கமைசான்ற. (௧௫௬௬)

சித்தமறிவீரிதுநாட்டீராக்குடும்பபா
ரத்தையும்மிலேற்றியமிழ்த்தாம லத்தனேயும். (௧௫௬௭)

யானேபொறுத்துநின்றேனல்லதுவேறும்மிடையா
தேனுமொருதொந்தரவுஞ்செய்திரோன் மாநிலத்தோர். (௧௫௬௮)

சித்தமகிழ்ந்தியற்றுந்தீபாவளிப்பெருநா
ளித்தலத்தினேயிராவெய்தலா லத்தையிவர் (௧௫௬௯)

மேனலஞ்செய்யாதுமிகச்சுருக்கிச்செய்தனமென்
றீனமெவர்சொல்வர்நமதிஷ்டமே யானதினு (௧௫௭௦)

லுள்ளதுகொண்டேபுரிகுவோமென்றிவளுரைக்க
வுள்ளமகிழ்ந்தன்னவனுமோதுவான் றுள்ளி. (௧௫௭௧)

நரகாசுரன்மடிந்தநாளிற்பெருமான்
சரணம்புயமலரிற்றாழ்ந்து மரலமுறு. (௧௫௭௨)

மிங்காளேநன்னாளாயெங்குங்கொண்டாடவரந்
தன்னாற்படைத்திருக்குந்தன்மையால் இன்னநல. (௧௫௭௩)

மன்னுபுண்யகாலமருவுபலனேப்பெறநா
னென்னவகைசெய்வேனிளமயிலே பொன்னுடையார். (௧௫௭௪)

## நாயகன் நாயகிக்கு லேவாதேவி விஷயங்கூறல்.

தன்பாற்கடன்வாங்கித்தான்புரிவோமென்னிலது
வன்பாய்விளேந்துவருங்கெடுதி பொன்கேட்பாற். (௧௫௭௫)

கெவ்வளவுசொத்திருக்குமென்பலைநயாராய்ந்துநன்றாய்
யொவ்வியசொத்தாயிரத்துக்கோர்நூறே வவ்வுதற்குப். (௧௫௭௬)

போதுமெனக்கொண்டுமெக்கிப்போதுதுகைநல்குதற்கிங்
கியாதுமிலேயாகிலிருந்தாலும் ஓதுமொரு. (௧௫௭௭)

நூற்றுக்குக்குன்றுதுநோக்கப்படிகொடுப்பேன்
ஏற்றமில்லைநூற்றுக்கிரண்டாயாம் போற்றுமதை. (௧௫௭௮)

யா றுமாசக்கெடுவிலாய்ந்துசெலுத்தாதுவிடி
லூறில்கடன்பத்திரமுற்பத்திமுத லீறுவரை. (கருஎகூ)

ஐந்துவட்டியாகவுமவ்வாறுமாத்தைக்கொருக்கால்
முந்தைமுதலோடுமுதலாக்கி யிந்தவித. (கரு அ0)

மாச்செலுத்தவேண்டுமீதன்றிமறுபேச்சிலையென்
றார்ச்சிதமாய்ச்சொல்லவனொப்பியே வாய்ச்சபடி. (கரு அக)

பத்திரமுமீடுகண்டுபாக்காய்ரிஜிஸ்தர்செய்து
மத்தொகையிற்கால்வாசியாமுசிதம் பத்திரத்தின். (கரு அஉ)

கொள்ளையர்கெட்டெழுத்துக்கூலிரிஜிஸ்தர்ச்செலவோ
டௌளரியசேவகர்க்கிஞ்செலவு துள்ளுவண்டி. (கரு அஙு)

வாடகைமற்றின்னசெலவாமென்றுந்தள்ளிமிச்சங்
கூடியதைக்கையிற்கொடுத்தபின்னர் நீடிநாட். (கரு அச)

கேளாதுவிட்டுக்கெணிதவட்டியேறுமட்டும்
வாளாவிருந்தவாயிதா நாளோர்ந்து. (கரு அரு)

சேர்ந்தமுதலத்தனைக்குஞ்சீவில்வழக்கிட்டுமிகத்
தேர்ந்தசெலவோடுமதைத்தீர்ப்பாக்கி யாந்தரங்க. (கரு அசா)

மாகச்சபுத்திவாரண்டுப்பியோனொடுதன்
பாகத்திருவர்களைப்பாலித்து வேகமுடன். (கரு அஎ)

சென்றிடர்சித்திபெறச்செய்வீரென்றேவவவர்
பின்றிடவொன்றுவிழும்பேரிடிபோ லன்றுபுகும். (கரு அஅ)

நாடுகளைமாடுகளையாஸ்திகளைவீடுதுறைழந்
தோடியுப்புச்சட்டிவரையோடுமுதல் நீடுமனை. (கரு அகூ)

காணிகளையாவுங்கவர்ந்துகுடியோட்டிவிட்டார்
கேணியவன்குடும்பங்கெட்டனவே நீணிலத்தி. (கருகூ0)

லிப்படியேபல்லாரிவர்பாற்கடனேற்றுத்
துப்புரவாய்க்கெட்டார்சொலவரிதே ஒப்பரிய. (கருகூக)

பாளையப்பட்டுத்துரைகள்பால்வலியச்சென்றுசிலர்
நீளுமனேவர்த்திகழ்செலவுக் காள்வினையாய். (கருகூஉ)

நாங்கள் தருவோ மீங்குநல்குமுத லுக்குவட்டி
தாங்களென்னபோட்டா லுஞ்சம்மதமே யோங்குபணம். (கருகூங)

காசுபெரிதல்லக்கன முள்ள தங்கள் சித்த
நேசமதேகோடிநிதியாகும் வீசுமுதல். (கருகூச)

நூற்றுக்கரைவீதம்நோட்டெழுதித்தந்திடில்யா
மேற்றமிகுந்த துகையீகுவேம் தோற்றமுள்ள. (கருகூரு)

மாமதுரைசென்னைமருவும்பினுங்கிரங்கோன்
பாமருவுபம்பையுயர்பங்காளம் க்ஷேமமிகு. (கருகூசு)

நாகப்பூர் சிங்கப்பூர் நாகைதிருநெல்வேலி
வாகொப்புகொச்சிமலையாளம் மாகொழும்பு. (கருகூஎ)

தில்லிஜூகிராபாத்துசித்தூர்கடப்பைமுத
லெல்லுலவுதேசமெல்லாமெம்புழக்கந் தொல்லுலகி. (கருகூஅ)

லெவ்விடத்துக்கா னு லும்யாங்கள் தருமுண்டியலே
யவ்விடமெல்லாஞ்செல்லுமாகையாற் செவ்வியநற். (கருகூகூ)

சித்தம்போல்யாங்கள் திறம்பாதொழுகுவமென்
றெத்தியிவர்சொல்லுமிழுக்குரையை நத்திநித. (கசு00)

மல்காமற்சொற்பசொற்பமாகத்தொகைவாங்கிப்
பல்கா லும்நோட்டெழுதிப்பாலிக்கப் பில்குசிறு. (கசு0க)

தூறல்பெருவெள்ளமெனத்தொக்கிப்படர்ந்தனபோ
லூறிலக்ஷலக்ஷமாயோங்கினவே மாறியிவ. (கசு0உ)

ரீட்டுதுலைவட்டியிரண்டரைதுப்போதுறலாற்
காட்டுமெரைவட்டியினிக்கட்டாது நோட்டுகளை. (கசு0ங)

யொன்றுய்த்திரட்டியொரேபத்திரமாக்கிப்
பொன்றுதிரண்டேனும்போடுங்கள் துன்றுவள. (கசு0ச)

மேந்துசமுத்திரத்துக்கேறல்குறைவில்லெனபோல்
வேந்தர்களுக்கீதோர்விஷயமா ஆய்ந்துசித்தம். (கசு0ரு)

மாமகிழ்ச்சிகூர்ந்துமறுபத்திரமெழுதித்
தாமதமில்லா துதருதிரெனப் மாமுகபெம். (கசு0சு)

நீள்சிலைப்பேனுகிமிண்டிக்கறிப்பனபோற்
சூனிலர்விடாமற்ருெடர்ந்துபற்றக் கேளிரென. (கசு0எ)

வின்னவர்கணம்பாலியம்பிநின்றகட்டுரையும்
பின்னதற்குமாறுபட்டபேதகமுந் தன்னுளத்திற். (கசு0அ)

கண்டுணர்ந்துமற்றிவர்சங்காத்தமினிப்போதுமெனக்
கொண்டெழுகால்வாட்டிகுறிப்பிட்டுத் தண்டமிழிற். (கசு0கூ)

தீர்க்கமுடையான்சிவகங்கைவாழிசுலா
மார்க்கமதினின்றவரன்முறையான் கார்க்கடல்சூழ். (கசுக0)

வையம்புகழுமகம்மதிசுமால்நெடுநாட்
செய்யுந்தவத்தில்வந்தசீராளன் துய்யநெறிச். (கசுகக)

செல்வத்துரைத்தனத்தார்செய்தசட்டம்லாக்கள்முற்றுஞ்
சுல்பிற்பொதிந்தகளஞ்சியவான் பல்குபல. (கசுகஉ)

பத்திரங்கள்சாசனங்கள்பாகசுவிகாரமுயில்
எத்தனையோலாவுக்கிசைந்தபடி சித்தமொத்து. (கசுகங)

முற்றீட்டலேயசலாய்முன்னிமுடிக்குந்திறவான்
சுற்றீட்டமேவுந்தொடர்பினன் கொற்றமிகு. (கசுகச)

மன்னவர்கொண்டாடுமெதாருசிக்கந்தரெனு
மின்னிசையான்றன்னையினிதழைத்தே யன்னவனும். (கசுகரு)

பத்திரமுந்தீட்டிப்பயில்ரிஜிஸ்தர்செய்துநல்கச்
சித்திபெற்றோமென்னுஞ்செழிப்புளராய் தத்தமூர். (கசுகசு)

சென்றுாிருந்தார்செலும்வாயிதாப்படுமுன்
மன்றேறிக்கோர்ட்டில்வழக்கிட்டே வென்றுபெரு. (கசுகஎ)

மான்களென்றுமெண்ணுமல்வன்ஜபுத்திக்கட்டளைகொண்
டாங்குபுகுந்தேறியரண்மனையைப் பாங்கொடுசூழ்ந். (கசுகஅ)

தேற்றவிலைபெற்றபொருள்யாவுங்கவர்ந்துகொடுங்
கூற்றமெனக்கோர்ட்டிற்கொடுபோகி மாற்றலின்றி. (கசுசகூ)

பின்னிதவேலத்தில்விட்டும்பெட்புறுஜமீன்சிலதைச்
சின்னபின்னமாக்கிச்சிதறிவிட்டா ரின்னவர்கள். (கசுஉ0)

புன்மையுலகத்தவாமேற்புல்லுருவியென்றறிந்தும்
நன்மதியுண்டாவதொருநாளுமில்லை மென்சிறையாட். (௧௬௨௧)

## முதலாளியைவஞ்சித்து கடன்வாங்குதல்.

காட்டிகலையாதுமுட்டைதானெடுப்பான்காற்செருப்பை
மீட்டொருவண்ணான்கவர்ந்தவிந்தைபோல் நாட்டவரை. (௧௬௨௨)

யெத்திமுதல்சேர்த்தவனையெத்தத்துணிந்துகடுஞ்
சித்தனொருவன்சிறந்தசெல்வனொப்பாய்த் தத்திமிகத். (௧௬௨௩)

தூண்டுபரியேறிச்சுடர்வேகடட்பணிகள்
பூண்டிருவரேவல்புரிந்துவர வீண்டிமுத. (௧௬௨௪)

லாளிதனைக்கண்ணுற்றளாவிப்புகழ்ந்துமையிர்
நாளிலுறவுற்றதுநற்றவமே கேளுநமக். (௧௬௨௫)

காஸ்திபளவிலையானாலுமிதுநற்சமையம்
பூஸ்திதியாய்கொள்ளும்பொருட்டுற்றோந் தீர்த்தபதி. (௧௬௨௬)

னாயிரத்திற்பாதிநம்பாலானமற்றப்பாதியைநீ
ரீயுமுசிதங்கால்சேர்த்தெண்ணம்போ லாயவட்டி. (௧௬௨௭)

கூட்டியொரேமொத்தங்குறித்ததினத்தினம
தாட்டலைவர்தன்பாலனுப்புவோம் மீட்டுகெடுத். (௧௬௨௮)

தாண்டினாற்பத்ரஞ்சனித்தமுதலுடையார்
வேண்டும்போதைந்துவட்டிவீதமா யாண்டுதொறும். (௧௬௨௯)

வட்டிக்குவட்டியிட்டுவாஜீபியாய்ச்செலுத்தக்
கட்டுப்பாடுற்றோங்கருத்திலெனப் பொட்டிமகன். (௧௬௩௦)

வீசங்காசேனும்விடாமேலழுத்தமுள்ளவனை
யாசையெனும்பம்பரத்திலாட்டியே மாசுமூன்று. (௧௬௩௧)

மக்குப்பிடித்திருக்கமாயமென்னசெய்தானோ
சொக்குப்பொடிமருந்தைத்தூவினனோ சிக்கிமுழுக். (௧௬௩௨)

கல்லானநெஞ்சுங்கரைந்துமெழுகாயுருகிப்
பொல்லாதகாலப்புணர்ப்பினா லொல்கியவன். (௧௬௩௩)

சொத்தொன்றும்பாராமற்றொல்லீடுங்காட்டாமற்
பத்திரமுந்தீட்டிப்பணமீய வித்தொகையிற். (கசுஙச)

கால்நஷ்டியாமெனக்குக்கைமேலுமக்கிதில்முக்
கால்நஷ்டியாமெனவுங்கைகாட்டி மேலுமினி. (கசுஙரு)

யுன்னாலியன்றதுபாரோகோவெனவுளத்துற்
றன்னானூர்புக்கானகமகிழ்ந்தே பின்னரிழி. (கசுஙசு)

வானகெடுசூதுவிளையாடல்விலைமாதர்மது
பானமதில்மூழ்கிப்பணமுழுதுந் தானிழந்து. (கசுஙஎ)

வீணாயுற்றவனைமிக்கமுதலாளிதினம்
வீணாயுற்றுவெறிதலைந்து நாணமுறக். (கசுஙஅ)

கெஞ்சியடிக்கடிபோய்க்கேட்டவுடனேயவனும்
வெஞ்சமுறச்சீறிவெகுமிடுக்காய் வஞ்சகநீ. (கசுஙகூ)

## முதலாளியைதூஷணமாய் திட்டுதல்.

யெப்பத்தொகைகொடுத்தாயேதுமுழுமோசமிது
பொய்ப்பத்திரமோபுதிப்பித்தாய் தப்பிலியென். (கசுச0)

கையெழுத்தேபோலுமிதுகற்பனைபாரிப்படியா
வையகத்தையெத்திமயக்கினாய் செய்திடுமிப். (கசுசக)

போர்ஜரியின்குற்றமிதேபோதுமுன்னைலேசில்விடேன்
வேர்வொழுகமாட்டிவிலங்கிட்டுச் சார்ஜ்பண்ணித். கசுசஉ)

தீட்டியோரேழ்வருடந்தெண்டிப்பேன்யாம்பகர்நம்
வீட்டுளேன்வந்தாய்வெளியேநில் கோட்டுக்குப். (கசுசங)

போய்வழக்குச்செய்வையங்குப்போந்துகெஞ்சையீர்ந்துனது
வாயில்மண்ணைப்போட்டுவருகிறேன் றேயமதிற். (கசுசச)

செங்கோற்றுரைத்தனத்தார்செய்தசட்டதிட்டமெலா
மங்கோர்ந்தேன்முற்றுமவதானம் இங்கீஷிற். (கசுசரு)

பீயேபியல்முதலாய்ப்பேர்பெரியதேர்ச்சியுற்றி
ராயபகதுரொனும்பேரெய்தினேன் ஙேயமுள்ள. (கசுசசு)

லாயர்களென்பாலனுகிலாப்பயிண்டின்றூற்பரியந்
தாயொருடேர்ந்தனர்களாதலால் நீயோ. (கரு௪எ)

விழுக்குடையசுத்தமுட்டாளென்னுடன்வாதித்து
வழக்கைச்செயிக்கவோவல்லாய் பழக்கத்தா. (கரு௪அ)

வின்னபாரிஸ்டருனக்கேற்பட்டுவந்தாலுஞ்
சின்னபின்னமாக்கியதைச்சேதிப்பே ஏரிந்நிலத்தில் (கரு௪௯)

முந்தியதாம்பூலமுதனிம்பரென்றலகி
லெந்திறமைநீகேட்டதில்லையோ யிந்தவித்தை. (கரு௫0)

யெங்கேபடித்தாயெவருனக்குப்புத்திசொன்ன
ரங்கேபோய்ச்செய்வாயதுபலிக்கும் வெங்கொல்லர். (கரு௫க)

வீதிதனிலூசிவிலைவிற்றல்விலைப்போமோ
யேதெனைநீமற்றவர்போலெண்ணியோ சோதித்தா. (கரு௫உ)

யப்படியாசெய்திநல்லதாகட்டுமபாரசம்த்தைத்
தப்படியிம்மட்டாசதிமோசங் * கப்படியாற் (கரு௫௩)

கொட்டினாற்றேளின்குணமறிவாரிக்கலியிற்
கட்டுரைசேர்நல்லதற்குக்காலமில்லை துட்டர்மித்ர. (கரு௫௪)

பேதத்தாலுன்மதியைப்பேதிக்கச்சூதுவித்தை
போதித்தார்தம்மைப்புகன்றிடா யேதனைச். கரு௫௫)

சும்மாவிடேன்வலுவிற்றாண்டில்மீறெப்பவிழுந்
தம்மாவென்றேங்கியலறியழப் பாற்முதலா. (கரு௫௬)

யேவுதற்குற்றத்திற்கிருகால்விலங்க டியா
தேவிடிலென்றீரமிருந்தென்னபயன் மாவலிய. (கரு௫எ)

ரெல்லோருமென்னேடெதிர்த்துமுடியாதுகடற்
கல்லோலமென்னக்கலக்கமுற்றூர் வெல்லுமெனப். (கரு௫அ)

† பாறொருத்தன்மேற்பாயும்பான்மையெனவந்தாய்நீ
வேறொருத்தனைல்விடுவேனே தேறவுநீ. (கரு௫௯)

---

* கப்படி-கொடுக்கு. † பாறு-பருந்து. ஒருத்தல்-யானை.

யற்பனமக்கீடிலனென்றங்கோதயவுவைத்து
வற்புறுத்தல்பண்ணுதுமன்னித்தேன் சற்பனையாய்த். (கசுசு0)

தொட்டிலையுமாட்டித்துடையினிலுங்கிள்ளுகின்ற
பட்டிமக்களுரிம்பலருளரால் கெட்டவர்கள். (கசுசுக)

சொல்வார்த்தைகேட்டுச்சுகமிழந்துபோகாதே
நல்வார்த்தையாகுமென்சொல்நம்புவாய் செல்போகக். (கசுசுஉ)

கையிருப்பையார்க்குங்கடனுடன்கொடாமலினிப்
பையிருப்பிற்கட்டிப்பதுக்குவாய் பொய்யிலையான். (கசுசுங)

செப்பியநன்மார்க்கந்தெரிந்தனவோ நீயிங்கு
கப்புச்சிப்பென்றுசத்தங்காட்டாம லப்புறம்போ. (கசுசுச)

வென்றுபலவாறுயெடுத்தேதிப்பேசமனங்
கன்றிமுதலாளியிருகானநிங்க நின்றுநகி. (கசுசுரு)

## முதலாளிமனம் வருந்துதல்.

எண்ணுதுமெண்ணியிடைந்திப்பொருளைக்கூட்டுதற்குப்
பண்ணுதசெட்டுகளைப்பண்ணிமனம் புண்ணாய்த். (கசுசுசு)

துலைதூரதேசமெல்லாஞ்சுற்றித்திரிந்தங்
கலைவாய்க்கடற்குளமிழந்திப் பலதொல்லைப் (கசுசுஎ)

பட்டேனுழன்றேன்பரதவிக்கப்பெண்டிர்பிள்ளை
விட்டேனலைந்தேன்மெலிந்துநான் கஷ்டமுட. (கசுசுஅ)

னுண்ணுதிரவலர்வந்தாளென்றுற்குட்டி யிட்ட
பெண்ணாய்போற்சீறிப்பிதற்றியே மண்ணனிற். (கசுசுகூ)

படைத்தமுதலையிந்தப்பாவிதனக்கேயொப்
படைத்துமுதலைநொந்தேனந்தோ கிடைக்கரிய. (கசுஎ0)

இஷ்டரைவட்டிக்கங்கியுமெனக்கேட்டவர்க்கா
கட்டுமென்றுநாளைக்கடத்தியே ‡ தட்டல்வட்டிப். (கசுஎக)

பேராசைபூண்டுபெருத்ததொகையிழந்த
சீராளனென்போற்றெளிந்நுரார் பார்மீது. (கருஎஉ)

---

‡ தட்டல்-ஐந்து

நீதவட்டிக்கியாதநீதவட்டிக்கீந்தமுத
லாதல்போற்றோன்றியழியுமென    வேதநூ. (௧௬௭௩)

லாய்ந்திருந்துமாசைக்களவில்லையென்பனபோ
லோய்ந்துமதிகெட்டேனுணங்கினேன்    வாய்ந்தவிசும் (௧௬௭௪)

## முதலாளி தெய்வபிரார்த்தனை பண்ணல்.

பிந்திரனீடேறவெழுபாரறமீற்க்
கொந்தளிக்குமன்பர்குறைதீர    வந்துதித்த. (௧௬௭௫)

பன்னிருகைவேலாபழிக்கஞ்சுந்தேவேமீ
னன்னவிழியாய்கூடலம்பிகாய்    முன்னே. (௧௬௭௬)

வடங்காரலைத்துயிலுமாலேநீரிந்தக்
கடன்காரனெஞ்சைக்கரைத்துக்    கொடுஞ்சனியன். (௧௬௭௭

வட்டியொன்றும்வேண்டாமுன்வாரிக்கொடுத்தமுதல்
மட்டும்வந்தாற்போதும்வழக்கிலையே    நஷ்டத்தாம். (௧௬௭௮)

* றேலிக்கையுற்றிடுமென்செங்கைவசமாக்குதிரேல்
நாலத்தோர்பங்குமக்குநல்குவேன்    மேலுற்ற. (௧௬௭௯)

பொன்னுபரணம்புயங்காபரணமுடன்
சொன்னபிஷேகமிட்டுச்சூட்டுவேன்    முன்னோர்ந்த (௧௬௮௦)

காணிக்கைக்கெல்லாங்கணக்கிட்டுவட்டியுடன்
பேணிச்செலுத்திப்பெருக்குவேன்    வேணியினில. (௧௬௮௧)

திங்களணிமாரியற்குத்திட்டிக்கிடாயும்வெட்டிப்
பொங்கலிட்டுங்கோவிற்புதுக்குவே    னெங்குடியைக். ௧௬௮௨)

## முதலாளி கோர்ட்டில் வழக்கிடுதல்.

காப்பாற்றுமென்றுகனதெய்வம்போற்றியுயர்
தாட்பானஞாயஸ்தலம்புகுந்து    தீர்ப்பாக்குஞ். (௧௬௮௩)

சாரந்தெரிந்தவக்கீல்தம்மையடுத்துண்மையிலோர்
வாரமதிற்கோட்டில்வழக்கிட்டா    னோர்பிரதி.(௧௬௮௪)

---

* தேலிக்கை-கணக்குறைவு.

வாதிக்கறிக்கைமுந்திவந்ததுகண்டேங்கியீதற்
கேதுசெய்வோமென்றிவனுமெண்ணியே சூதும். (௧௬௮௫)

## பிரதிவாதி சாக்ஷியேற்படுத்தல்.

திருட்டுமுருட்டுமிகத்தோந்தகசவஞ்சப்
பிரட்டரிடமடுத்துப்பேசி மிரட்டுமிதி. (௧௬௮௬)

லென்தரப்புச்சாக்ஷிகளாயெண்ணியுமைக்கோருகிறேன்
றன்றிறமையோடிதுபோற்சாற்றுவீர் முன்பவர்கள். (௧௬௮௭)

கற்பனையாயிப்பத்திரங்களிந்ததேதியினி
லப்பீல்விஷயமொன்றையாலோசித் திப்பிரதி. (௧௬௮௮)

வாதியுடன்யாங்கள்சென்னைவைகியதெதார்த்தமந்த
வீதியிலுள்ளார்க்கும்விசிதமா மோதுமிவன். (௧௬௮௯)

பொன்னுடையானல்லபுகழ்தீரசுந்தமுள்ளான்
பன்னுமறமுள்ளான்படிறுரையான் இன்ன. (௧௬௯௦)

கடன்வாங்கலுண்மையென்றுங்கட்டுப்பாடானை
படுமோசத்தாலியற்றும்பண்பே யுடையதென. (௧௬௯௧)

நீவிரிருவருந்தானிச்சயமாயச்சமற்றங்
கேவறாநற்சாக்ஷியியம்புவீர் சீவில்முன்னம். (௧௬௯௨)

பூகத்துக்கொல்காமற்பொய்யையோரேமொழியாய்ச்
சாதித்தாலெவ்வழக்குந்தள்ளலாஞ் சூதுற்ற. (௧௬௯௩)

வாதிவக்கீலும்மைமருள்படக்கிராசுபண்ணிப்
பேதிக்கச்செய்துபிரட்டுவான் போதிலுளங். (௧௬௯௪,

கன்றியுணர்ச்சிகெட்டுக்கைமறந்துமெய்மறந்தங்
கொன்றுகிடககொன்றையுளறிவிட்டு நின்று (௧௬௯௫)

விழியாதீர்மெத்தவிழிப்பாய்நான்சொன்ன
மொழிபோலுஞ்சாக்ஷிமொழிவீர் வழுவிதென. (௧௬௯௬)

நீரஞ்சவேண்டாம்பிகழ்சீமைலாயர்களை
யீரங்கிபேசவிழுக்கிறேன் நேரே. (௧௬௯௭)

மனுவாதிவக்கீல்தனக்கும்வாய்பூசி
யனுசரித்துக்கொள்வோமடக்கி மனசார. (௧௬௯௮)

வாஸ்தவமாயுந்தமக்கோர்மாசெய்தாதெய்திஞுமென்
ஞஸ்திமுற்றும்பாராதழித்திடுவேன் தூத்தேரி. (கசுகூகூ)

யாட்டுமுடக்தனக்கோரானைப்பலிகொடுப்பேன்
வாட்டமினியேனுமருளாதீர் கேட்டீரா. (கஎ00)

யிவ்வழக்கைப்பற்றிநமக்கிஷ்டரொடுபேசியகால்
மைவிளைக்கைமாதர்மருணீங்க மெய்வளர்த்து. (கஎ0க)

## சாக்ஷிகளுக்கு குலதெய்வம்வந்து சொன்னதாய்

### தயிரியங்கூறல்.

நம்புகுலதெய்வமின்றுநாடியருள்கூர்ந்தெனது
தம்பிதுரைச்சாமிதன்மேற்சன்னதமாய்த் தும்பிகொட்டி. (கஎ0உ)

ழுதண்டமாயிறங்கிமோதியெனைப்பார்த்துறுமித்
தீதண்டுஞ்செய்கைதெரிந்தாயா நீதம்பீ. (கஎ0௩)

யேண்டாயெனைமறந்தாபித்தனையுஞ்செய்தவனுன்
தாண்டாயென்பூசைதவிர்ப்பனவோ ழுண்டவுன்பங். (கஎ0௪)

காளியுடன்சண்டையிட்டுஞ்சாருண்டளவுமென்னை
யேளிதமாய்த்தேடாதிருந்துவிட்டாய் நீளியவுன். (கஎ0ரு)

முன்னவர்கள்பூசைமுறைதவருதெஞ்ஞான்றும்
நன்னயமாய்க்கொண்டாடிநண்புற்ற ரன்னவர்கள். (கஎ0சு)

பூமியினிலிட்டவித்தும்பொன்ஞய்விளையவிஷ்ட
காமியங்களெல்லாங்கதித்தோங்க மாமகிழ்ச்சி. (கஎ0எ)

யாயவர்க்குநானேயருகிருந்துவேண்டியச
காயமுறச்செய்துகாப்பாடிவந்தேன் நீயொருத்தன். (கஎ0அ)

நல்லகுடிக்குநடுநாயகம்போலுஞ்
செல்லமகன்வந்துசெனித்திட்டாய் தொல்லுலகிற். (கஎ0கூ)

றெய்வமிகழேலாலயந்தொழுகைசெய்யநன்றெண்
றவ்வைநூல்கற்றுமலைக்கழித்தாய் கவ்வையினுல். (கஎக0)

நைந்தவுனக்கின்றுவரும்நாளைவரும்புத்தியென்று
புத்தியிலிந்நாளும்பொறுத்திருந்தேன் வந்துவந்து. (கஎகக)

பன்னுட்கனவிற்பகர்ந்துமிகழ்ந்தாயினிமே
லென்னுற்பொறுக்கவியலாது தன்னகத்தால். (கஎகஉ)

விஞ்சுசுடர்கான்றிடுதன்வீட்டுவிளக்கென்றுமுத்தங்
கொஞ்சிடிற்சுடாமற்குளிருமோ நெஞ்சினிலன். (௧௭௧௩)

புற்றவனீயானுலுமுள்ளறிவுகாட்டிவைத்தேன்
மற்றுனக்கிப்போதுபுத்திவந்தனவா முற்றும். (௧௭௧௪)

பொறுத்தேன்பிழையனைத்தும்புண்படவுன்சிந்தை
வெறுத்துக்கவலைகொள்ளவேண்டா முறுக்கித். (௧௭௧௫)

துயர்ந்தயெதிரிதனைத்தோற்கடித்துன்பக்ஷம்
ஜெயந்தந்தேனென்றுகரந்தீட்டி நயந்திடவென். (௧௭௧௬)

கைமேலடித்துன்கருத்துநிறைவேறியபின்
னையப்படாமலெந்தனாலயத்தில் மெய்யாய்நீ. (௧௭௧௭)

சொல்லியசொற்போலுந்துலங்கியபூங்கப்பரையாம்
நல்லபெரும்பூசைநடத்துவையென் றெல்லவர்க்கும். (௧௭௧௮)

நின்றுபரிபூரணமாய்நேர்ந்தபலகேள்விசொல்லி
யன்றுமலையேறியமர்ந்ததே நன்றொருடறங். (௧௭௧௯)

காதுகலிகாலமிதிற்கண்கண்டதெய்வமிதைக்
கோதுகுறைசொன்னார்குடிகெடுமே ஓதிலெங்கள். (௧௭௨0)

தெய்வத்தைப்போலுமொருதேவுண்டோவாய்திறந்தாற்
கைமேற்பலிக்குமெந்தக்காரியமும் உய்தலினிப். (௧௭௨௧)

பெற்றேன்பயமொழிந்தேன்பேச்சுப்போலுந்தமக்குச்
சொற்றவுருவண்ணந்தொகைகொடுப்பேன் முற்றறிந்து. (௧௭௨௨)

பாருமெனச்சொல்லியவப்பாசாங்குப்பேச்சைநம்பி
நேர்பட்டாரிந்தநிருமூடர் கோருமிரு. (௧௭௨௩)

## சாக்ஷிகளிலொருவன் கூடாதெனல்.

சாக்ஷிகளிலேயொருவன்தற்கிப்பானீதில்நமக்
கேச்சுவருமன்றிநலமெய்தாதே வீச்சனபொய்ச். (௧௭௨௪)

சாக்ஷியுனைத்தோரும்லஞ்சந்தான்வாங்கினோருமந்த
மாச்செயிலிலாகுமுக்கால்வாசிப்பேர் சீச்சியவன். (௧௭௨௫)

ஆயிரந்தந்தாலுமொப்பலாகாதேயொப்பிடில்நம்
வாயிலேமண்விழுந்துமானம்போந் தூயமனு. (௧௭௨௬)

நீதியிற்கோரட்டார்நியாயவதிகாரிகளென்
ருேதியிந்தலோகமெல்லாமோசையாய்ச் சூதுகொண்டு. (௧௭௨௭)

தப்புப்பிரியாதுபண்ணல்தஸ்தவேசுப்பிரட்டுச்
செப்பருபொய்ச்சாக்ஷிதிருட்டுநடை கைப்படுத்து. (௧௭௨௮)

நம்பிக்கைமோசமனநாணுவிபசாரங்
கும்பிட்டகொள்ளைகொலைமுதலாம் வம்புகளைத். (௧௭௨௯)

தீர்க்கவிசாரித்துத்தெளிவாயவரவர்க்குத்
தாக்குகுற்றங்கண்டுதகும்படி தூக்குடனே. (௧௭௩0)

பங்கோற்பயின்றுபெருவிலங்குமாட்டியிரு
செங்கால்தளரச்சிறைப்படுத்தல் பங்கவப. (௧௭௩௧)

ராதந்தனைவிதித்தல்காட்டுகின்றவம்பினிலே
வேதனையாய்க்கட்டிமிகவடித்தல் ஈதான. (௧௭௩௨)

தெண்டனைகளெல்லாந்திரணபக்ஷபாதமின்றிக்
கண்டினைகள்செய்யுமிந்தக்காலத்தில் கொண்ட. (௧௭௩௩)

பொருட்காசைபூண்டுநாம்பொய்சொன்னாலென்ன
திருக்காய்வருமோதெரியோம் தருக்கமிடும். (௧௭௩௪)

நாளைக்கோரட்டினிலேநம்மைப்பிடித்தபொல்லா
வேளையென்னவந்துவிடியுமோ கோளெனவும். (௧௭௩௫)

## மறுத்துஞ் சம்மதித்தல்.

விம்மியுரைத்தான்மறுத்துமிக்கபணத்தாசையினால்
மம்மரடைந்துமதிகேடாய்ச் சம்மதித்துக். (௧௭௩௬)

கோரட்டுவாயற்குறுகியுபயகட்சிக்
காரர்களுமெய்தியங்குகாத்திருக்கப் பார்புரக்கும். (௧௭௩௭)

## கோர்ட்டார் தீர்மானம்.

வல்லகோரட்டார்மனுவுபயவாதிகள்தன்
சொல்லுரையும்பத்திரத்தின்சூழ்ச்சியையும் நல்குபல. (௧௭௩௮)

சாக்ஷிகளின்வாய்மொழியுஞ்சாராமிசைக்ஷகளெல்லாம்
ஊர்ச்சிதமாயாலோசித்துண்மைதனை மாட்சிமையோ. (௧௭௩௯)

டாய்ந்துவாதிக்கேயனுகூலத்தீர்ப்புரைத்து
மாந்துமெதிர்வாதிகுற்றமன்னித்தே — யேந்துமர. (௧௭௪0)

சாட்சியர்முன்னச்சமின்றியப்பிரமாணம்புகன்ற
சாட்சிகளாம்மொண்டுதடியருக்கும் — மாய்ச்சலுறக். (௧௭௪௧)

கோரவிலங்கிட்டுக்கொழுத்ததலைமண்சுமக்கத்
தீர்மானமேழ்வருடஞ்செய்தனரே — நேரிலினைநக். (௧௭௪௨)

## தெண்டனைபெற்ற சாக்ஷிகள் வருந்தல்.

கேட்டவுடனன்னோர்கெடியாலிடியடர்த்து
வீட்டுக்குருவெனவும்வீழ்ந்தலறி — மீட்டுமொரு. (௧௭௪௩)

வர்க்கொருவர்தன்கழுத்தைவாவிப்பிடித்தினைய
சொற்கள்பலபன்னித்துடித்தழுவார் — தற்குணத்தால். (௧௭௪௪)

முன்னாலேகெட்டவர்கள்மூவரொன்றுசொல்வர்கள்நாம்
தன்னாலேகெட்டோஞ்சதைக்கொழுப்பால் — நன்மனையாள். (௧௭௪௫)

போகாதேபோகாதேபொல்லாதஜட்சியென்று
சாகுருவிபோலுந்தடுத்தாளே — ஆகெடுவான். (௧௭௪௬)

மல்லாரிபெற்றமகன்மாய்த்துக்குள்ளாகி
யெல்லாநலமுமிழந்தோமே — செல்லமகன். (௧௭௪௭)

நம்பிதுரைச்சாமிதன்மேற்சாமிவந்துதாம்பயலே
மொய்ம்புறக்கோபித்துமுறுகினதாம் — பின்புமுனக். (௧௭௪௮)

கேஜெய முண்டாக்குவனென்றேற்கவலக்கைகொடுத்துப்
பூஜையப்பாற்போடென்றும்போயினதாம் — தோசியவன். (௧௭௪௯)

எத்தனையோதந்திரமாயேமாத்திநம்மிருவர்
புத்திமயக்கமுறப்போதித்தே — யெத்திமெல்லக். (௧௭௫0)

கொண்டுவந்துமாட்டிக்குடியைக்கெடுத்துநம்மைத்
தெண்டனைக்காளாகவிட்டான்சிற்றப்பா — பண்டைநல. (௧௭௫௧)

மெண்ணமுடையனுனக்கேதேனுந்தந்தானோ
கண்ணாணைநானறியேன்காலக்காசு — மண்ணுவான். (௧௭௫௨)

வாயாலேயேய்த்துவகைமடிப்புச்செய்துவெறி
நாயாயலைந்துநலியவிட்டான் — ஓயாமல். (௧௭௫௩)

நாடியிவன்சொல்மொழியைநம்பாதேநம்புவதிற்
கேடுவருமென்றேனீகேட்டிலையே நீடுமக்கோர். (௧௭௫௪)

தாழ்வுவரிலாஸ்திமுற்றுஞ்சாதிப்பேனென்றுரைத்த
பாழுறுவானெங்கோ பறந்துவிட்டான் வாழ்வுகந்து. (௧௭௫௫)

மேலில்வெயிற்பட்டறியோம்வேலையொன்றுஞ்செய்தறியோம்
எல்லைநலத்தோடிருந்தோமென்செய்வோம் காலில்விலங் ()

கிட்டொருவன்வன்ஜெயிலிலேவுபலகஷ்டமுற்றும்
பட்டுவந்தான்சொன்னான்படிப்படியாய்க் கட்டைவெட்டச் ()

சொல்வாராஞ்சாடிமுக்கச்சொல்வாராஞ்செக்கிழுக்கச்
சொல்வாராமண்சுமக்கச்சொல்வாராம் பல்வேலை. (௧௭௫௭)

செய்துமுடித்துஞ்சிறிதுசெய்யமுடியாதுவிடில்
வைதுவெயிற்போட்டுவதக்குவராம் ஐயையோ. (௧௭௫௯)

காலாலுதைப்பாராங்கையாலிடிப்பாராங்
கோலால்நற்பூசைகொடுப்பாராம் ஒலிடவெங். (௧௭௬௦)

காவல்வசப்பட்டுக்கழிவதினுமச்செயிலின்
சேவகர்நிர்ப்பந்தமோசெப்பரிதாம் தாவன்னம் (௧௭௬௧)

கெஞ்சித்துங்கிட்டாதாங்கேப்பைச்சுடுகளியாம்
பஞ்சொத்தகாற்கிரட்டைப்பாடகமாம் அஞ்சுற்ற. ௧௭௬௨)

இன்னவிதமாஞ்ஜெயிலேழ்வருடமுத்தரித்துங்
கென்னவிதமாகவுமீடேறுவோம் அன்னமய (௧௭௬௩)

வூணிழந்துபேணுமுடவிழந்துநெஞ்சநிறை
யேணிழந்துகீர்த்தியிழந்தாலும் நாணிழந்து. (௧௭௬௪)

தன்னீர்க்கலசமொன்றுதாங்கியுயிர்கொண்டுலவல்
நன்னீர்மைத்தன்றேநடைப்பிணமே முன்னேற்று. (௧௭௬௫)

தென்னபவஞ்செய்தனமோயேழ்வருடமுந்தொலைந்த
பின்னலவோபெண்சாதிபிள்ளைமுகந் தன்னைநாம். (௧௭௬௬)

காணுவமோவல்லகடவுள்செயலெப்படியோ
நீணிலத்திலாயுளென்னநிச்சயமா வீணன்முழுப் (௧௭௬௭)

பாவியிலுஞ்சண்டாளப்பாவிநமக்கெங்கிருந்தான்
தாவியட்டமத்துச்சனிபோலே தேவியுடன். (௧௭௬௮)

டக்களுநின்றேங்கிமயங்குவமோநம்பனைகவர்
கெக்கலிகொட்டிப்புரிவர்கேளிக்கை யக்கோவென் (௧௱௬௯)

றையநெடுஞ்சிங்கையராயாண்டுவிலங்கிட்டவர்கள்
தெய்வமதைநொந்துசெயலழிந்தார் பொய்யனெனும். (௧௱௭௦)

## பிரதிவாதியூர்க்குச்சென்று சொத்துகளை மறைத்தல்.

அப்பிரதிவாதியர்ந்துநான்றெண்டனைக்குத்
தப்பினதேமுன்னோர்கள்தர்மமென்றும் வெப்புறவே. (௧௱௭௧)

சாறிவரும்போதுகண்டோர்தான்வினவுங்காலையிவன்
மாறுறவோர்போக்காய்வழுத்துவான் தேறவக்கீல். (௧௱௭௨)

சாக்ஷிகளுக்கெவ்வளவோசாதனையைப்பற்பலகால்
கூச்சமறச்சொல்லிக்கொடுத்திருந்தும் பேச்சைமறந் (௧௱௭௩)

தீரங்கிக்காலத்திலெக்கசக்கமாயுளறிப்
பாரெங்குந்தூற்றப்பழியடைந்தார் பேர்மங்கிக். (௧௱௭௪)

கொட்டாரெனையுங்கொடுத்தார்கடுஞ்சுழலிற்
பட்டாழ்கலம்போற்பயனிழந்தேன் கெட்டியாய். (௧௱௭௫)

ஆனைவால்பற்றினவராறுகடந்துய்வர்சிறு
பூனைவால்பற்றினவர்போலானேன் ஆனாலும். (௧௱௭௬)

கோரட்டார்செய்தகொடுமைகொடுமைதிரி
யூரட்டார்செய்கைவலியூழென்றுங் கோரட்டார். (௧௱௭௭)

மீதிலதிகோபமாய்வேகமுடனூர்புகுந்து
மோதியதன்சொத்துமுழுவதையும் பேதமில்லா. (௧௱௭௮)

மற்றவிடத்தேபதுக்கிவாதியினிமேலிதனைப்
பற்றிமுடிந்தமட்டும்பார்க்கட்டுஞ் சற்றுங். (௧௱௭௯)

இவலைவிடமாட்டேனிரிந்துபடிகட்டிக்
கவலையுற்றுவீழ்வான்கயவன் அவலமுற்ற. (௧௱௮௦)

மப்பினிலோர்வேளையந்தவாரண்டிற்சிக்கிவிட்டாற்
றப்பிவெளியேறுதற்குத்தந்திரமுண் டிப்படிவாய்ச் (௧௱௮௧)

சட்டதிட்டங்காட்டிச்சமர்த்தாகப்பேசினும்வெண்
சட்டைகண்டாற்கால்கள்தரியாதே கஷ்டமுற்ற. (௧௭௮௨)

## வாதியின்சங்கதி.

வாதிகளிகூர்ந்துவலியஜெயம்பெற்றோமென்
றோதரியவேமாப்புடையனய் ஆதியெனும். (௧௭௮௩)

மீனாக்ஷிசுந்தரற்குமிக்கவபிஷேகமுதற்
றனக்ஷியாகச்சமர்ப்பித்தே யானல்நான். (௧௭௮௪)

நன்மையேசெய்திருக்கநாடுமெதிர்வாதியெனைத்
தின்மையுறப்பேசிமெத்தச்சீறினன் அன்னவனை. (௧௭௮௫)

ஊரார்சிரிக்கவொருநாளைக்காணு லும்
பாராச்செயிலில்வைத்துப்பார்ப்பேனன் பாருமென. (௧௭௮௬)

## வாதிவாரண்டெடுப்பல்.

நட்டணைகள்பேசிநயந்துபிடிவாரண்டுக்
கட்டளைக்காகப்படியுங்கட்டியே சட்டெனவே (௧௭௮௭)

வாரண்டுச்சேவகனைவல்லையுறக்கூட்டிவந்தே
யூரண்டிவைத்தங்குசாவியே நேரலனேர். (௧௭௮௮)

தாவளத்திற்பந்தகமாய்த்தங்குதல்துப்பாலுமறிந்
தாவலித்துக்கண்டுபிடித்தக்கணமே சேவகன்பாற். (௧௭௮௯)

காட்டியவனேகிவன்காலயெமபாசமெனத்
தீட்டியவாரண்டைச்செலுத்தவே யாட்டமுற்று. (௧௭௯0)

## வாரண்டிலகப்பட்டபிரதிவாதி சேவகனை உறவுகொண்டாட்டல்.

வந்தீரோ அண்ணவளர்குழந்தைகுட்டிகளுஞ்
சிந்தனையில்லாதெவருஞ்க்ஷேமமா முந்திநா. (௧௭௯௧)

வண்டியகோரட்டிலனேகந்தடவையும்மைக்
கண்டிருப்பேன்பேசிக்கலந்திலேன் பண்டுங்கள். (௧௭௯௨)

கீர்த்திநெடுநாளளவுங்கேட்டிருப்பேன்தங்களைநான்
பார்த்துவரவென்றுற்பலசோலி யார்த்த. (௧௭௯௩)

சிரஸ்தேதார்மற்றுமுள்ளசேவகருத்தியோகர்
பரிக்ஷையுண்டெல்லாரும்பழக்கஞ் சிரஸ்ததார். (க௭௬௪)

என்பாற்பிரியமவரோதோவிசேடமென
வன்பாற்கடிதமனுப்பினார் நன்பாலா. (க௭௬௫)

நெய்தயிர்பால்காய்கறிகணேர்ந்தபழவர்க்கமிரும்
பைதவழ்தேனின்னம்பலசாமா னெய்துமதைச். (க௭௬௬)

சேகரித்துநாளுநின்றுசெவ்வாய்க்கிழமையங்கு
மோகரித்துநான்வருவேன்முந்திநீ யேகுவையென். (க௭௬௭)

றுதரவுஞ்செய்தங்கனுப்பினேனீருமந்தக்
காதர்கான்றன்னையெதிர்கண்டிருப்பீ ரீதுநிற்கத். (க௭௬௮)

தூண்டுமிந்தவாதிக்கோர்துட்டளவில்யான்கொடுக்க
வேண்டியதேயில்லைவெகுமோசம் மூண்டவெனக். (க௭௬௯)

காகாவிரோதிகளுமக்ரமவாதிப்பயலும்
வாகாகச்சேர்ந்துமறைவுதலா யூகித்துக். (க௮௦௦)

கற்பனையதாயோர்கடன்பத்திரமமைத்துச்
சற்பனைவிரோதிகளேசாக்ஷியாய்ச் சொற்பயிற்றி. (க௮௦க)

மட்டிவழக்கிட்டான்மறுதலிக்குங்கேள்விகட்குத்
தட்டியெதிர்சொல்லத்தரமுண்டோ சட்டமுள்ள. (க௮௦௨)

கோரட்டில்நேரேகுறித்திடும்விசாரணையிற்
சிரிட்டென்பக்ஷஞ்செயமிருக்கப் பாரிஷ்ட (க௮௦௩)

ரோதிபங்கியாயமுணராதஜட்ஜியசல்
வாதிபக்ஷந்தீர்ப்பைவழுத்தினு னீதைநா. (க௮௦௪)

னப்பீலில்மாற்றயடிப்பேனதாற்பெரிய
தப்பிதமனேகருக்குஞ்சள்ளையுண்டென் றப்புறமும். (க௮௦௫)

நன்றிசெய்தலாலேநமக்கோர்குறைவும்வரா
தென்றெண்ணிப்பேசாதிருந்துவிட்டேன் பொன்றுகையை. ()

யாயிரத்தோடின்னமுமையாயிரமாலுமற்றப்
பேயரைப்போற்சற்றுமனம்பேதியேன் ஞாயமின்றித். (க௮௦௭)

தொந்தமுள்ளதீர்ப்புத்தொகையைச்செலவுடனே
சந்தேகநீங்கச்சரிக்கட்டி முந்தாநாட். (க௮௦௮)

செம்மடையன்றன்பாற்செலுத்திவரும்படியாய்
நம்முடையகாரியஸ்தர்நாகுவையர் தம்மிடையே. (கஅ0கூ)

னையுரக்கமாகக்கடுகியஜவாரியுடன்
னையுரக்கக்கட்டிப்பணமனுப்ப னையரந்த. (கஅகO)

வாதிபாற்சென்றுமக்குவாஸ்தவமாயுள்ளதுகைக்
கேதுமறுபேச்சுக்கிடமில்லை யீதுடன்கோ (கஅகக)

ரட்டுச்செலவிலனைரவாசியல்லதும
திஷ்டம்போற்றள்ளியிணக்கமாய்க் கட்டுமிதை. (கஅகஉ)

வாங்குவீரென்றுவெகுவாய்நயந்துசொன்னரா
மாங்கவனெப்பாதாலடமீறி யீங்கு. (கஅகங)

மறுபடியுங்கொண்டுவந்தார்வந்ததுகைனயக்
கறுவிமுகர்ப்போட்டிறுக்கிக்கட்டி. யுறுதியுடன். (கஅகச)

கோரட்டில்நாளைக்குசாலாய்ந்தொகைசெலுத்திச்
சீரிட்டுவாரதென்றுசிந்தித்துச் சாரட்டு. (கஅகரு)

வண்டியுந்தயார்ப்படுத்திவைத்திருக்குங்காலையுமைக்
கண்டேனிதயங்களிகூர்ந்தேன் பண்டுபுரி. (கஅகசு)

மாதவத்தாலும்மைவரப்பெற்றேனுமிருவர்
பேதமில்லைநீரென்பிறவியே பூதலத்தில் (கஅகஎ)

நல்லார்சிநேகமதைநாடுவதேயன்றிநிலை
நில்லாப்பொருள்தானிலைவரமோ நல்லோரே.' (கஅகஅ)

## வாரண்டுச்சேவகனைப்பிரதிவாதி வீட்டுக்கழைத்து

## வருதல்.

வாசனைசேரென்மனையில்வந்திருந்தங்கோர்வேளை
போஜனஞ்செய்தப்பாற்புறப்படுவோம் யோசனையேன். (கஅககூ)

வாருமண்ணவென்றுபலவார்த்தைகளைப்பேசவிந்தக்
கூறுகெட்டவேனவாய்க்கூதறையன் நேருடனே. (கஅஉ0)

மெய்ப்படுசொல்லென்றுநம்பிவேகமுடனெழுந்தான்
கைப்படுசந்தோஷங்கவடுகொண்டே பொய்ப்புளுகன். (கஅஉக)

## மனைவியிடத்திற்சொல்லுதல்.

நண்ணுமனையினிற்போய்நாயகியைக்கூவியென்ற
னண்ணத்தைவந்தாரறியாயா　　நண்ணு. (கஅ௨௨)

யிருந்ததடிபாவாயிவர்நமக்குமெத்தப்
பரிந்திடுசிநேகசம்பந்தம்　　வருந்திநீ. (கஅ௨௩)

யாரென்றிராதேயிவருளக்குமச்சானும்
பூருவத்திற்செய்திருந்தபுண்ணியமே　　யோருருவாய் (கஅ௨௪)

வந்தாரிவற்குவரிசையுபசாரமிட்டு
விந்தையுடன்பேசாவிருந்திடுவோஞ்　　சந்ததமும். (கஅ௨௫)

நம்மனையிலேபசுக்கள்நாளுழியோகறக்கும்
அம்மணத்தானல்விருந்துக்கஞ்சுவனே　　கம்மலிலே. (கஅ௨௬)

நித்தியமுந்தப்பாமணிகடைந்தவெண்ணெய்தனைப்
புத்துருக்குநெய்போற்புனிதமாய்　　வைத்துமலர்த். (கஅ௨௭)

தாதுலவுஞ்சாடிகளிற்றானிருக்குமேயதனைப்
பூதிச்செலவுபண்ணிப்போடாதே　　போதுமென்ற. (கஅ௨௮)

## பலகாரவர்க்கம் கூறுதல்.

பச்சரிசிமுக்குறுணிபற்றாதுபற்றலேபென்
றச்சமயமுக்காலமுகாதே　　பச்சரிசி. (கஅ௨௯)

பின்னெம்புதக்கிட்டாலேராளம்நீயென்ன
சின்னஞ்சிறிசோதெரியாதா　　பின்னுங்கேள் (கஅ௩0)

பச்சைக்கடலைபசும்பயறுகோதும்பை
மொச்சையுளுந்துமுளைத்துவரை　　யிச்சையொடு. (கஅ௩௧)

பந்திநிறைசாரப்பருப்புவாதாம்பருப்பு
வந்தனவீதெல்லாம்வகைவகையா　　யந்திரத்தில். (கஅ௩௨)

மாவரைத்துத்தெள்ளிமதுரம்புகட்டியதை
நீவளமாய்ச்சேர்ப்பாய்நிமிடத்தில்　　நாவினிய. (கஅ௩௩)

சீனிச்சருக்கரையுந்தேனுங்குடங்குடமாய்ப்
நானிச்சமைமைத்துநல்குவேன்　　மானேதண். (கஅ௩௪)

பூமலிவெண் பூந்திபொலிவுறுசிலேப்பிலட்டு
மாமதுரமிக்கமதுர்பேணி சோமாசா. (௧௮௩௫)

பாதுமல்வாநெய்யுருண்டைபாலடைரவாலாடு
தாதுவிர்த்திசெய்திடுகுஞ்சாலாடு மோதுநொக்கல். (௧௮௩௬)

பால்கோவாசேவுபணியாரந்தோசைமன
மால்மேவுபோளிவடைசுகியம் நால்விதமாம். (௧௮௩௭)

அப்பளந்தேம்பாகோடதிரசஞ்சீராபருப்பி
முப்பழஞ்சேரல்வாமுதலாக விப்புவியி. (௧௮௩௮)

லென்னபலகாரமுண்டோயாவுமுன்கைப்பக்குவத்தால்
நன்னயமாய்முந்திநடக்கட்டும் மன்னுசுவை. (௧௮௩௯)

## விருந்துவளப்பம் கூருதல்

காட்டுவிருந்திணுக்குக்காய்கறிசாமான்கள்பல
தேட்டமறக்கொண்டுவந்துசேர்க்கிறேன் நீட்டுசிறு. (௧௮௪௦)

சன்னச்சம்பாவரிசிச்சாதத்தைநப்போதமுல்லை
மன்னுமலர்போலாய்மலர்த்தியே யின்சுவையிற். (௧௮௪௧)

கூட்டுக்கறிகள்குழைகறிகள்நெய்த்துவட்டல்
பாட்டிசைநேர்பச்சடிபொற்பாளிதங்கள் வேட்டருந்து. (௧௮௪௨)

மோர்க்குழம்பைச்சற்றுமுதிரவிடாமலுந்தீம்
பாற்குழம்பைமெத்தப்பசுந்துசெய்வா யேற்கும். (௧௮௪௩)

பருப்பிரசமுன்கையினுற்பக்குவமாறுலோ
கருப்பிரசம்போலினிக்குங்கண்டாய் விருப்புபெருங். (௧௮௪௪)

காயமதைக்கொஞ்சங்கனமாகச்சேர்த்திடுவை
வாயுவைக்கண்டிக்குமலர்த்தும் ஆய. (௧௮௪௫)

கறிவகையில்மிச்சங்கடுகையிடாயத்தா
லிறுகுமலங்காங்கையெழுமே நறியசெழும். (௧௮௪௬)

பாயசத்துக்காகப்பழுதறுகோதும்பைரவ்வை
யாயதிற்றீம்பாலையளந்துவிட்டுத் தூயபன்னீர். (௧௮௪௭)

சுக்குச்சாதிக்காய்துடிசேர்கிராம்புடனே
பக்கரசம்வாதாம்பருப்புநெய்யு மொக்கநலஞ்ர். (௧௮௪௮)

சேருங்கற்கண்டொடுநற்சீனியுமொன்றாய்க்கலந்து
சாரந்தெளிவுபடத்தாளித்து — மாரஞ். (௧௮௪௯)

சிதமுறவும்பக்குவமாய்ச்செய்தாலண்ணாவுக்
கதுபிரியமாயிருக்குமன்றோ — புதுமலரிற். (௧௮௫0)

றேமதுரம்போலுந்திரட்டுப்பால்பண்ணுவதை
நீமறந்திடாதேநினைவில்வைப்பா — யாமிநிற்றப். (௧௮௫௧)

## விருந்து வளப்பம்

பாதுபலகாரவர்க்கம்பாதிசெலவாகமற்றப்
பாதியைச்சூதானப்படுத்துவாய் — ஓதுமிவர். (௧௮௫௨)

கூடவேசென்றந்தக்கோர்ட்டிற்றுகைசெலுத்தி
மாடிதிகழண்ணுமனைபுகுந்து — நாடியண்ண. (௧௮௫௩)

தேவியார்மற்றும்வளர்செல்வரையும்பார்த்தவர்க்கு
நாவினியபட்சணமுநல்கியே — மாவிலேயி. (௧௮௫௪)

லண்ணியர்க்கோர்பட்டுமருமைக்குழந்தைகட்கு
வண்ணச்சிற்றுடைவழங்குவே — னண்ணாவுக். (௧௮௫௫)

கூதாப்பெரியசரிகையுருமால்கொடுப்பே
னீதெனக்கோர்லெட்சயந்தானில்லையே — மீதி. (௧௮௫௬)

யிருப்புத்துகையிலிவர்க்கியன்றமட்டுங்
குறிப்பறிந்துபின்னுங்கொடுப்பேன் — மறுத்துநீ. (௧௮௫௭)

வேண்டாமென்றோதிவெகுவாய்த்தடுத்தாலும்
நீண்டகைகொடாதினிமேனிற்குமோ — வீண்டிலகி. (௧௮௫௮)

லிவ்வையத்துக்குள்ளாய்நானெவ்வளவோதேடியபொன்
னவ்வளவுமேவிறையமாக்கினேன் — மெய்வருந்து. (௧௮௫௯)

றீனர்களுக்கீயாமற்றேடும்பொருளவர்பின்
போனதுணுவுண்டோபுகலுங்காற் — றூனகுணம். (௧௮௬0)

மன்னியதோராவேழுவள்ளலெனக்கீர்த்திபெற்றா
ரன்னவர்களீகையினாலல்லவோ — வென்னண்ணா. (௧௮௬௧)

வெந்தாகமீறவந்தோரெய்யிலிடைநடந்து
வந்தார்பசிபொறுக்கமாட்டிலா — ரெந்தோகா. (௧௮௬௨)

யற்றத்தரித்திரமென்னைப்பளத்தைவாட்டியிங்கு
வற்றலெனீநன்றுய்வதக்கியே — பற்றித். (௧௮௬௩)

தொழவுரியமாற்றுத்துவையலிட்டோர்குத்துப்
பழையதுவைப்பாய்முன்பசிக்குக் — குழைவுறவே. (௧௮௬௪)

வாய்க்குருசியாய்வளமாய்க்கறிவகையுந்
சீக்கிரமாகட்டுஞ்செழுஞ்சமைய — லாக்கர்கடை. (௧௮௬௫)

மாடுலவுஷாப்பிற்சாமான்கொஞ்சம்வேண்டுமென்றே
யோடியிதோவாங்கியொருமினிட்டில் — நாடிமிக. (௧௮௬௬)

## பிரிதிவாதிவாரண்டுசேவகனுக்குத் தப்பியோடுதல்.

வாரேன்வாரேனெனவும்வாரண்டுச்சேவகனைக்
காரியம்போலெத்திக்கடும்புளுகன் — பாரி. (௧௮௬௭)

யளப்பிதுவேயாமென்றதுபோக்காயோடி
யொளித்திடவச்சேவகனுமுள்ளங் — களித்து. (௧௮௬௮)

வருவான்வருவானென்றெண்ணிவழிபார்த்து
மொருநாளுங்காணுனுணய்கி — மருளிலம்மை. (௧௮௬௯)

## சேவகன்மனம்வருந்தல்.

மோசமேசெய்ததிலோர்மோசமிலையேமிகப்பே
ராசையெனக்கூட்டியலமலத்தித் — தோசியிவை. (௧௮௭0)

னெத்தனையோவார்த்தையிதமாயுரைத்தொழி
யத்தனையும்மெய்யென்றேயானிருந்தே — னித்திரமாய். (௧௮௭௧)

வஞ்சிப்பானென்றுகிஞ்சமாத்ரமறிந்தாலிவனை
மிஞ்சிப்பறக்கவிடுவேனோ — கொஞ்சியுல. (௧௮௭௨)

கேத்துகொடையாளியைப்போலென்னெனமோபயல்தான்
பூத்தானங்காட்டிப்புளுகினனே — தூத்தேரி. (௧௮௭௩)

நல்லவிருந்தாம்வீட்டில்நாளுழிப்பாலுள்ளதாம்
அல்லவுநெய்ச்சாடியளவிலையாம் — வெல்லமிட்ட. (௧௮௭௪)

கூட்டுக்கறியாய்க்குழைகறியாம்வக்காளைப்
போட்டுக்கிடந்தபுளிக்கறியா மூட்டுகின்ற· (௧௮௭௫)

பச்சடியாம்நெய்யாம்பருப்பாமதிரசமாங்
கிச்சடியாம்வைச்சடிச்சுக்கின்னுவனும் பட்சணமாம் (௧௮௭௬)

நற்றிரட்டுப்பாலாமென்னுயகிக்குப்பட்டுடையா
முற்றுமெனக்கோருருமாலாஞ் சொற்றகொடைக். (௧௮௭௭)

கன்னுவதாரக்கடும்புலியாய்யாவர்தடை
சொன்னாலும்வாரிச்சொரிவானும் இன்னபல· (௧௮௭௮)

வார்த்தைகளாலேமாத்திமாயமாய்த்தப்பியசங்
காத்திமகன்போனவழிகாணேனே யாத்தாடி. (௧௮௭௯)

...டெடுத்தகள்ளனுக்கிங்காக்கியிட்டகள்ளியிவட்
கீடொருவருண்டோவென்றிவ்விதமாய் வாடியய்வ. (௧௮௮௦)

னுங்காங்கு...ார்ப்பானயர்ந்துமனங்குழைவா
னேங்காமலேங்கியழுந்திருப்பா னிங்கிவனும்· (௧௮௮௧)

ஆஜரில்லையென்றுசொல்லியத்தாட்சிவாங்கவென்று
லோசரியாய்வாதியவனைப்பானே நீசகன்செய் (௧௮௮௨)

மோசமதையுள்ளபடிமுற்றுமொழிந்தாலுமந்த
நாஸரெந்தன்சொல்மொழியைநம்பானே பேசியநா. (௧௮௮௩)

ளோரெட்டிற்சேவகன்பாலொப்பித்தேனென்றுசொல்லிக்
கோரட்டில்வாதிமனுக்கோருவனே நேரிட்ட. (௧௮௮௪)

குற்றமதைக்கண்டுணர்ந்துகோரட்டார்சேவகத்தைப்
பற்றறவுநீக்கிவிடப்பார்ப்பாரே நற்றயவா. (௧௮௮௫)

யாதியிலென்பாட்டனதன்பேரிலென்தகப்பன்
பாதுகொண்டயானும்பரம்பரையாய் மேதையுடன். (௧௮௮௬)

சாலவெண்பத்தேழ்வருடச்சார்வீசேயாகுமிந்த
வேலையிழந்துவிடுவேனோ தோலாண்டி· (௧௮௮௭)

வேடம்பூண்டாலும்வெய்யனைநான்கண்டுபிடித்
தேடைரிபோட்டவனைத்தெண்டிக்கக் கோடறிய (௧௮௮௮)

நாடிவருவேனெனவுநாளுமிவன்போற்சிலருந்
தேடியலைந்தோடித்தியங்கினரால் நீடுகெடற்· (௧௮௮௯)

பேரண்டந்தன்னில்வெகுபேர்கள்பயங்கொண்டுபொல்லா
வாரண்டெவ்வேளோவருமோவென் நீரற். (கஅகூ0)

கருகியதுவேங்கினைவாய்க்கண்கலங்கிநாளு
மருவுகின்றபோழ்துவழிமே லொருவனங்கு. (கஅகூக)

தாவுசட்டைபூண்டவனுய்த்தன்போக்காய்ப்பாதைவரச்
சேவகனேவென்றுதிகிற்பிடித்து லாவிதனுற். (கஅகூஉ)

பாதித்தலைசினைத்தும்பாதிசினையாதிருக்கும்
போதுபறிபட்டுப்புளக்கடையாய் மோதுபெருங். (கஅகூங)

காடுகளிலேபுகுந்துங்காணுமலைப்புடம்பும்
தேடியொளிவார்சிலபேர்கள் நீடிலகி. (கஅகூச)

## மற்றும்பிரதிவாதிகள்வாதியைக்கண்டு கேலிபண்ணுதல்.

லார்ப்பரித்துநாளுமரசுபுரிகோரட்டார்
தீர்ப்புரைத்தபின்னுஞ்செலுத்தாமல் சூர்ப்புறத்தன். (கஅகூரு)

மாவளஞ்சேராஸ்தியெல்லாமற்றவர்க்குவிற்றுவிட்ட
பாவனைபோற்பத்திரமுற்பத்திபண்ணிக் கூவிக். (கஅகூசு)

கருதுமசல்வாதிதனைக்கண்டவுடனேங்கிச்
செருமிநின்றுமீசைதிருத்தி மருவுஜெயிற். (கஅகூஎ)

கெல்லாரைப்போலுமினியபடிகட்டவிதி
யில்லாப்பயற்கேனிறுமாப்புத் தொல்லைமுடை. (கஅகூஅ)

நாறுஞ்செயில்தனையுநானறிவேனென்றுசொல்லிச்
சீறித்திரிவார்சிலபேர்கள் மீறுகின்ற. (கஅகூகூ)

## முதலாளிகள் ஒப்பந்தம்செய்தல்.

வாணிபர்கள்கைப்பணத்தைவட்டிக்காயிச்சைகொண்டு
நாணயமிலாதவர்க்குநல்கியே வீணிற். (ககூ00)

றெருத்தெருக்கடோறுந்திரிந்தலைந்துசிந்தை
வருத்தமிகக்கொண்டுமறுகால் ஒருத்தருக்குஞ். (ககூ0க)

செப்புக்காசேனுஞ்செலவிடல்கூடாதெனவே
யொப்பந்தம்பேசியொழித்துவிட்டா ரிப்பரிசால். (ககூ0உ)

வாணிநிவிற்போன்றநுதல்மானேவெறுங்கைமுழக்
தாணிடுவதுண்டோநீசாற்றுவா யானாலும். (ககூ0ங)

நன்கார்ந்தபண்டிகையைநாமுஞ்செய்வாமெனச்சீ
வன்போலும்பூண்டிருந்தமங்கலத்தை முன்போலும். (ககூ0ச)

கொண்டோடிவிற்றுக்குலாவியதீபாவளியை
யுண்டாடல்காட்டியொழித்தனரே மண்டலத்தோர். (ககூ0ரு)

இவ்விதமாய்ப்பஞ்சத்திடர்மருவுகாலையினிற்
றெய்வபலத்தாலுமிதைத்தீர்ப்பமெனச் செவ்வியல்சேர். (ககூ0சு)

## மஹாநாட்டார்பஞ்சநிவர்த்திசெய்யச்

## சங்கங்கூடுதல்.

நானாகுலத்துதித்தநாட்டுத்தலைவர்களும்
மானாபிமானமுள்ளமாந்தர்களும் ஞானவளம். (ககூ0எ)

பொங்குமதுரைப்புதுமண்டபத்தில்மகா
சங்கமெனச்சேர்ந்துசபைகூடி யிங்குநாம். (ககூ0அ)

ஆண்டவனிலாதவடிமைபோநம்மைவழி
பூண்டகுலதெய்வமென்னபொய்த்ததோ யீண்டியநங். (ககூ0கூ)

கைக்குள்வெண்ணெய்க்கட்டிகனமாகவைத்திருந்தும்
நெய்க்கலைவார்போலுநினைவயர்ந்தோம் பொய்க்கலியாற் (ககூக0)

சங்கரனுமய்யமெடுத்துண்டான்றடங்கடலின்
மங்கையுடன்காடுறைந்தான்மாலென்றுஞ் சங்கமதில். (ககூகக)

அவ்வைசொன்னநீதியறியோமோநாமினிமேற்
றெய்வசன்னிதானமதிற்செப்புவோம் பவ்வமெழுஞ். (ககூகஉ)

சூரியனைக்கண்டபனிதோன்றாதகல்வனபோற்
பாரில்வினையெல்லாம்பறந்துவிடும் வாருமென்று. (ககூகங)

## சோமசுந்தரக்கடவுள் சன்னிதானத்தில்

## நாட்டார்கள்முறையீடு.

பற்றுயத்தொடரும்பலந்தொலைத்துமுத்திதரும்
பொற்றமனாயின்புனலாடி முற்றுரிய. (ககூகச)

சத்திசிவமாகிநிறைதற்போதசிற்பரமாஞ்
சித்திவிக்கினேஸ்வரனைத்தெண்டனிட்டு மொய்த்துலவு. (௧௬௧௫)

சங்கெழுகதம்பகவனந்திகழ்மதங்கியுமை
பங்கயமணங்கமழ்பதந்தொழுது பங்கமர். (௧௬௧௬)

சதாசிவசுதாகரசடாதரசபாநட
னிதாகிதமிலாதவனிராசத னதீதிய. (௧௬௧௭)

னிராகரனிராமயனிராகிர்தனிராகுல
சராசரபராபரதயாபர னராவணிகொள். (௧௬௧௮)

வேதாந்தவேதியனைவேதனுமால்காணரிய
நாதாந்தமோனநவமணியை ஆதார. (௧௬௧௯)

மேவுகருணாலயனைவீரியப்ரபாகரனை
மூவுலகுந்தானாமுதற்பொருளைத் தேவாதி. (௧௬௨0)

தேவசகநாயகனைத்தேசோன்மயப்பொருளைப்
பாவனைக்குமெட்டாப்பரஞ்சுடரை யாவிதொறு. (௧௬௨௧)

மெள்ளுக்குளெண்ணெய்போலெங்குநிறைகின்றவனை
யுள்ளுக்குமுள்ளாயுறைபவனைத் துள்ளிவரு. (௧௬௨௨)

தந்தியதள்பூண்டவனைச்சச்சிதானந்தனைப்பொன்
னந்திவண்ணம்போலொளிருமற்புதனை சுந்தரற்குத். (௧௬௨௩)

தூதுசென்றமாமுதலைச்சூலாயுதக்கரனை
யாதிசருவேச்சுரவனுமயனைச் சோதிதவழ். (௧௬௨௪)

பங்கயக்கண்ணற்குப்பருதிவட்டந்தந்தானை
அங்கயற்கண்பாகமமர்ந்தானை யெங்கள்சிவ. (௧௬௨௫)

சொக்கேசரென்னுஞ்சுடர்தனைக்கண்டானந்த
நெக்குருகிநெக்குருகிநெக்குருகி யக்கணமே. (௧௬௨௬)

நாட்டாரனைவர்களும்நாடியகண்ணீரரும்பச்
சாஷ்டாங்கதண்டன்சமர்ப்பித்தே நாட்டமுடன். (௧௬௨௭)

வானாதிபூதமுதல்மற்றும்பொருளெவையுந்
தானாய்நிறைந்ததயாபரனே மேனாளி. (௧௬௨௮)

லம்புயனுமாலுமுடன்ருற்றுமிகல்மாற்றுதற்குத்
தம்பலழ்லாகிின்றதானுவே நம்புபஞ்ச. (ககூஉகூ)

வன்படையாலன்றிறந்தமாயவராகக்குருளைக்
குன்படைந்துபாலருத்துமப்பனே மின்சால். (ககூங0)

உலகந்தனைப்படைத்தீரோதரியசீவர்
பலவுமினிதாகப்படைத்தீர் உலவுமதற். (ககூஙக)

காதரமாய்மண்ணும்விண்ணுமாதாரமாக்கிமலை
வேதமுமுதெவ்வுயிரும்ரெக்ஷித்தீ ரோதுமிந்நாள. (ககூஙஉ)

அவ்விரண்டையுஞ்சுருக்கிலங்தோவான்மாக்களினி
யெவ்விதமுய்தற்கியலுமென்செய்வோம் செவ்வே. (ககூஙங)

பருவகாலத்தில்மழைபார்மீதுபெய்யா
தரியவிளைவில்லாதருகிப் பரவுயிரும். (ககூஙச)

வாடிவதுநாபமதோமாமறையினுட்பொருளை
தேடக்கிடையாச்செழுங்குன்றே நீடுகடைக். (ககூஙரு)

கண்பார்க்கடியார்கலக்கந்தவிருமென்று
பண்பாய்த்துதிகள்பலபகர்ந்து நண்பொடெதிர். (ககூஙசு)

நின்றுநெடுநேரநிகழ்த்துமொழிகேட்டையன்
கன்றுகண்டவாப்போற்கனிந்திரங்கி யொன்றுக்கும். (ககூஙஎ)

## சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்தல்.

அஞ்சாதீருங்கடமையாதரிப்போநீவிரினிக்
கொஞ்சமேனுங்கவலைகொள்ளாதீர் பஞ்சமிங்கு. (ககூஙஅ)

நேர்ந்தவிதமெம்மைநினையாதிகழ்ந்ததினுற்
கார்ந்திவிளையாடல்சற்றேகாண்பித்தோ மாய்ந்திடுங்கா. (ககூஙகூ)

லுள்ளத்துக்குற்றமொருகோடியானாலும்
பிள்ளைக்குந்தாய்க்கும்பிணக்குண்டோ வள்ளலென்று. (ககூச0)

நம்மிடம்வந்தன்பாயைந்துமொழிந்தீர் களுங்க
டம்மனம்போலேசகலசம்பத்தும் ரம்மியமுடன். (ககூசக)

நீங்கள்பெற்றுப்பூவுலகினீடுழிவாழ்ந்திருக்கப்
பாங்காயுமக்குவரம்பாலித்தோ மோங்குலகில். (ககூசஉ)

இன்றுமுதல்வானமிறங்கிவருஷிக்குமிகு
நன்றிகளுண்டாகுமினிநாடோறும் வென்றிபொரு. (கசுசங)

வேகவதிமுதலாய்மிக்கநதிதோறும்ப்ர
வாகமலிந்துவளம்பெருகும் நாகுலவு. (கசுசச)

வாவிதடாகங்களெல்லாமல்கும்புனல்சிறந்து
மேவுசெங்கென்முப்பூவிளைவோங்கும் பாவமறம். (கசுசரு)

வஞ்சங்கெட்டோமினிவாய்மையறங்காருண்யங்
கொஞ்சிக்கலந்துகுடியிருக்குங் கஞ்சமலர்ச். (கசுசசு)

செந்திருவும்வீற்றிருப்பள்தேவாலயங்களெல்லாஞ்
சந்ததமும்பூஜைதழைத்தோங்கு மந்திரிகளுந். (கசுசஎ)

சேனைராசாங்கமொடுசெங்கோல்தழைத்தோங்குந்
தானதவமெல்லாந்தலையெடுக்குங் கானக். (கசுசஅ)

கராசலமாமாதிகடையெறும்பென்றோதுஞ்
சராசரங்கள்யாவுந்தழைக்கும் நிராகுலமாய். (கசுசகூ)

வீரியத்தைக்கைப்பேற்றுமிகவாழ்வீராகிலுநன்
மாரிபொழிந்தவுடன்மாநிலத்திற் றெறநவே. (கசுருo)

யுத்தமக்கோநாளைமுழுமெருதுகட்குமுயர்
விந்தைபொருந்துவிதைகவித்துகட்கும் முந்து. (கசுருக)

தசகூலிமற்றதற்குந்தாட்டியாய்க்கையிற்
பசையில்லாதென்செய்வீர்பசவம் திசைவாகத். (கசுருஉ)

தீர்க்கமுடனிதனைத்தேடிவிசாரமனைத
மேற்கையுடனீவீரியமற்றுகிறு மேற்கனவே. (கசுருங)

முந்தும்பலன்கள்வரமூன்றுதிங்கள்செல்லுமிப்போ
துந்தும்பசித்துயரையோட்டுமோ வந்தோ. (கசுருச)

சிசுக்கள்முதலாய்த்தியங்கவருத்தும்
பசித்துயர்கேட்டுள்ளம்பரிந்தேன் வசித்துநீ. (கசுருரு)

ராறுதலையுள்ளவனென்றன்பாகவந்தவமக்
காறுதலையென்சொல்லியாற்றுவேன் கூறியுங்கண். (கசுருசு)

## சோமசுந்தரக்கடவுள் தமதுசரித்திரங்கூறுதல்.

தன்பாடுமுற்றுமென்பாற்சாற்றினீருங்களிட
மென்பாடுஞ்சற்றேயியம்புவே                னன்கார்ந்து. (௧௬௫௭)

வாழ்வுயர்பொன்வெள்ளிமலையாயிருந்தெனக்குத்
தாழ்குடிலப்பஞ்சந்தலைப்பாரஞ்                சூழுமுனி. (௧௬௫௮)

வோர்கள்பன்னியார்நகைக்கவுன்மண்டையோடேந்திப்
பாரிலையமேற்றதுவும்பண்டறிவீர்        ○ பார்வைக்கூ (௧௬௫௯)

ராருமதியாதவனு * யங்கமெடுத்தேன்பவத்தை
யீருமடியாருக்கெளியனுன்                யாருமற்றான். (௧௬௬௦)

அன்னைபிதாவில்லாவனுதியிவனென்னுமொழி
கன்னமுறவஞ்சிநெடுங்காடுற்றேன்                பின்னுமோர். (௧௬௬௧)

கர்பத்தில்ரெண்டானைகட்டியதனுலடைந்த
சம்பவங்கள்போதுந்தலைமுறைக்கும்                வம்பியரா. (௧௬௬௨)

யுற்றமனையாட்டிகளிலோங்குமிளையாளொருத்தி
யெற்றிமதித்தென்றலையிலேறினுள்                மற்றொருத்தி (௧௬௬௩)

யண்டாதநீலியடங்காப்பிடாரிமணங்
கொண்டேற்குமஞ்சாக்கொடுஞ்சூரி                மண்டமரில். (௧௬௬௪)

விற்காட்டுந்திக்குவிஜயமதிலென்படையைப்
பற்காட்டியோடும்படியடித்தா                ளிற்குரிய. (௧௬௬௫)

மாதிவளோ ✠ பொல்லாத ... வம்பியினுலன்றோநான்
பாதியுடலானதையும்பாருங்கா                ஞதிமுத. (௧௬௬௬)

லஞ்சுதலையாகின்றேனங்கமெல்லாஞ் * சூடுபட்டேன்
கொஞ்சவிதியானடுக்கங்கொண்டுநின்றே                னஞ்சமையி. (௧௬௬௭)

---

○ பார்வைமதி-ஆதவன். * ஆங்கம்-எலும்பு.

✠ பொல்லாத-பொள்ளாத வம்பி வாசனையுடையவள்.

... சூடு-அக்கினிமயம்.

* நடுக்கம்-நடுத்தலை.

லாட்டிவிட்டுக்கோட்டிகொண்டாளந்தோவிதையுதைக்கி
ஞாட்டிலுள்ளார்பின்னுகைப்பரோ    மீட்டுமெந்தக். கசுசுஅ)

கட்டழகிசொல்வார்த்தை 0 கண்டு பயந்தேனென்று
பட்டம்வைச்சுத்தேவர்பழிச்சார்கள்    நட்டலையாய்ப். (கசுசுகூ)

பிட்டுக்குமண்சுமந்தேன்பின்னிடையன்கைவாளால்
வெட்டுண்டேன்மேனிமிகச்சிவந்தேன்    செட்டியெனக். (கசுஎ0)

கோதில்வளைகள்விற்றேன்கொள்ளாவிறகுவிற்றேன்
சாதிகெட்டவேடனெச்சில்தானுண்டேன்    மாதுணிவாய்ச். ()

சென்றண்டர்காத்திருந்தில்லையினிலாடெடுத்தே
னென்றெனையம்பலத்திலேற்றினா    ரன்றொருநாள். (கசுஎஉ)

மாவகத்தைக்கொண்டவஞ்சர்வாழ்புரத்தைநானெரித்த
மீசவகத்தைக்கேட்டாம்சிரிப்பாகும்    பூவில்மறு. (கசுஎங)

போக்கில்லானென்றுமுழுப்பூச்சாண்டியென்று * மண்டங்
காக்கையென்றும்பொல்லாக் 0 கசடனென்றும்    நோக்கரிய ()

கள்ளன்மழுமாறியென்றுங் ‡ கஞ்சாக்குடியனென்றும்
பிள்ளைதின்னிப்பேயனென்றும்பித்தனென்றும்    முள்ளடிய. ()

0 ரீனமுள்ளானென்றுமிருகாலுந் ⊕ சந்துமிகப்
போனவிவனென்றும் † புழுக்கையென்று    மானமட்டு. (கசுஎசு)

மெய்யில்லானென்றும் வடிவேலருட $ மாமிதனைக்
கைகலந்தான் * போகிக்கடையனென்றுஞ் செய்யதங்கை. (கசுஎஎ)

மேலனலைமூட்டிவிட்டவீம்பனென்றுமென்பேர்சொன்
ஞாலவர்க்குஞ் ÷ கேவலமுண்டாமென்றுந்    நால்ரீனிவர்.()

0 கண்டு கற்கண்டு - பயம்பால்

* அண்டங்காக்கை உலகங்காக்குங்கடவுள்

0 கசடன்கஜத்தைஅடஞ்செய்தவன்

‡ கஞ்சாக்குடியன்-மேலானகுடும்பம்

0 ஈனமுள்ளான் - குற்றம்நினையாதவன்

சந்து · தூது - புழுக்கை - உஷ்ணமற்றவர்

† மெய்யில்லான்-சரீரமில்லான்

$ வேலன்மாமி மான்

* போகிக்கடையன் - நாககங்கணன்

÷ கேவலம்·மோக்ஷம்.

பத்தினிமார் கற்பைப்பரிக்கழித்தவம்பனென்றுந்
துத்தியமாய்ப்பேசியலர் தூற்றினார் உத்தமரே. (ககூஎகூ)

கற்பறம்புமீதொருவன் காற்செருப்பினாலுதைத்தான்
முற்பிரம்புகொண்டொருவன் மோதினான் வற்புறுத்திக். (ககூஅ0)

கல்லாலொருவன் கடிதெறிந்தான் மற்றொருவன்
வில்லாலுமாட்டிவிரைந்திழுத்தான் செல்வரெனப். (ககூஅக)

பற்றிப்புனையும்பணியோ பணியிடையிற்
சுற்றித்திரிவதுவுந்தோலாடை யுற்றிடுமிக் (ககூஅஉ)

கேவலத்தினாலவோ கேசவற்குப்பெண்ணளித்துத்
தாவுகடனாந்தெனக்குத்தந்ததுகாண் மாவளஞ்சேர். (ககூஅங)

இன்னகருளாரொருவனென் பூசனைக்குரியார்
மன்னில்மிகநல்லன்றருமியென்பேன் சொன்ன (ககூஅச)

மிடியால்வருந்தமெலிவதனைமாற்றும்
படியான்பொருளமைத்துப்பாடித் தொடைவருசீர்க். (ககூஅரு)

கோங்குதேர்வாழ்க்கையெனக்கூறுந்திருமுகமொன்
றங்கவன்பாற்றீட்டியனுப்பினேன் சங்கத்தி. (ககூஅசு)

லீட்டுதமிழக்கீரனென்போனென்கவியிலோர்குற்றங்
காட்டிப்பரிசைக்கடத்திவிட்டான் மீட்டுநீர். (ககூஅஎ)

நெற்றிக்கண்காட்டியெனைநீற்றிடினுமிக்கவியிற்
குற்றமேகுற்றமென்றுங்கூறினான் முற்றவுநீ. (ககூஅஅ)

ரென்பிழைப்பைக்கேட்டலெவர்க்குநகைப்பாமிகவும்
புன்பசியால்வந்தீர்புதல்வர்கா ளன்புறநு. (ககூஅகூ)

னுங்களுக்கேதேனுமுதவிசெய்வோமென்றலென்
செங்கையில்வேறேதுமுண்டோசெப்புவீர் பொங்குமுறப். ()

பூருவமாயாலும்பொருந்திவசித்திடுமோ
நேருண்டவ்வூரதுவுமொற்றியே கார்வளஞ்சேர். (ககூகூக)

பெற்றிகழின்னகரோபெண்வழியிற்சீதனமாத்
தொற்றிவந்ததாலெனக்குச்சொந்தமில்லை நற்றொனிவாழ்ல். ()

வண்டார்ந்தகையான்வழங்குமொற்றைமாடுண்டு
கண்டிரதற்குமொருகாலுடைக்கத் துண்டரா. (ககூகூங)

